

Team Health Shoppe
For Wellness

சென்னையில், டீம் ஹெல்த் ஷாப்பின் 4வது கிளை திறப்பு - புரசைவாக்கத்தில்

# ஆலோ வேரா அருந்துங்க ஜோரா

## ஆலோ வேரா ஜூஸ்...

நம் உடலின் நோய் எதிர்ப்பு சக்திக்கு தேவையான இன்றியமையாத அமினோ ஆசிட், விட்டமின், மினரல் மற்றும் என்சைம் ஆகியவற்றை கொண்ட ஆலோ வீரா தற்போது இயற்கையான ஜூஸ் வடிவில்...

- Cold press மூலம் பதப்படுத்தப்பட்டது.
- தரமான, சுத்தமான இலைகளிலிருந்து தயாரிக்கப்பட்டது.
- தேவையான சத்து பொருட்களை காக்க 100% stabilize செய்யப்பட்டது.

## டீம் ஹெல்த் ஷாப்பின் இதர பொருட்கள்

• டீம் சோடியம் அல்லாத உப்பு • டீம் அரை உப்பு • டீம் நல்லெண்ணெய்
• டீம் தேங்காய் எண்ணெய் • கற்றாழை - சருமம் மற்றும் மேனிப் பராமரிப்பு பொருட்கள் • தேன் வகைகள் • டீம் எனர்ஜி வாட்டர் • பனைப்பொருட்கள்
• மரபு முறை, கைகுத்தல் உணவுப் பொருட்கள் • கொடைக்கானல் மலை தைலம்

**ஸ்பெஷல் ஆஃபர்***

அனைத்து ஆலோவீரா தயாரிப்புகளுக்கும் 5 முதல் 10% தள்ளுபடி. இச்சலுகை குறிப்பிட்ட காலத்திற்கு மட்டுமே

*நிபந்தனைக்குட்பட்டது







**TEAM EUBIO CARE**

(Division of CAL)

வண்டலூர்: - போன்: 2275 0502
இந்திரா நகர்: - போன்: 4269 5115
அண்ணாநகர்: - போன்: 4269 3332
புரசைவாக்கம்: 238, கீழ்தளம், பிரின்ஸ் டவர், (அபிராமி மால் எதிரில்), புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை-10. போன்: 4542 8898

For bulk requirements, Contact :
Team House - GST Road, Vandalur, Ch - 48
Fax : 22750860 (or)
E-mail: teamhealthshoppe@drraoholdings.com

www.teamhealthshoppe.com




OPEN ON ALL DAYS



# வட்டமேஜை

## பெண் சிசுக் கொலை!

● நெஞ்சே வெடித்துவிட்டது! அரசாங்கம் சட்டம் போடட்டும்; மக்கள் தங்களால் இயன்றதைச் செய்யட்டும் - **ஆர்.பிருந்தா ரமணி, மதுரை** ● பெண்ணை ஒடுக்கும் சமூகம், பெண் குழந்தையின் எதிர்காலத்தைக் கேள்விக் குறியாக்கி விடுமோ என்ற பயமும்கூட பெண் சிசுக் கொலைக்குக் காரணம்தான். தன்னம்பிக்கை இல்லாத இந்நிலை மாற வேண்டும்! -**சீதாலக்ஷ்மி, சென்னை - 20** ● ஆணும்-பெண்ணும் ஸ்நேக பாவத்துடன் செயல்பட ஆரம்பித்தால்தான் இக் கொடுமைக்கு விடிவு பிறக்கும் - **கல்யாணி பாலு, திருநெல்வேலி - கிரிஜா ராகவன், கோவை** ● பெண் சிசுக் கொலைக்கு நடவடிக்கை எடுக்காமல் இடஒதுக்கீடு குறித்து வாதிடுவது கண்களை விற்று சித்திரம் வாங்குவதற்குச் சமம். **கு.கணேசன், மறைமலை நகர்**

## அணு ஒப்பந்தம் - தலையங்கம்

● அமெரிக்காவுடனான ஒப்பந்தத்தை மறு ஆய்வுக்கு உட்படுத்துவது அவசியம் - **உமரியார், மும்பை** ● சூரியசக்தியைக் கொண்டு மின் உற்பத்தி செய்து எரிபொருட்களை நாடுவதே சிறந்தது - **கி.ஜானகி, திருநெல்வேலி**

## தராசு!

● சிவாஜி வெற்றிப் படமா? என்ற கேள்விக்கு தராசின் பதில் படித்ததுமே 'சும்மா அதிருதில்லே' - **பெங்களூர், ப.மூர்த்தி** ● வெற்றுப் படம் என்று 'தில்'லாகச் சொல்லி இருக்கிறீர்களே... ரசிகர் கூட்டம் ஈக்காடுதாங்கலை நோக்கிப் படையெடுக்கப் போகிறது ஜாக்கிரதை! - **எம்.சம்பத், வேலாயுதம்பாளையம் - எஸ். முருகானந்தம், நாகர்கோவில்.**

## சேவாலயா!

● சேவாலயாவைச் சுற்றியுள்ள கிராமங்களில் குழந்தைத் தொழிலாளர்களே இல்லை என்ற செய்தி படித்ததும் சுதந்திர வைர ஆண்டை நினைத்துப் பெருமையுற்றேன். - **ஆர்.எஸ்.பாஸ்கரன், சென்னை** ● சேவாலயா செயல்படுவது திருவள்ளுவர் மாவட்டத்திலுள்ள 'கசுவா' என்ற கிராமத்தில். கட்டுரையில் குறிப்பிட்டுள்ளது போல் 'சுகவா' அல்ல. - **கி.ராமதாஸ், அயன்புரம்.**

***(தவறுக்கு வருந்துகிறோம் - ஆர்)***

# இந்த நிலை மாற



## கேபிள்

● 'கேபிள் பிடி சண்டை' அதிலுள்ள சூட்சுமங்களை A To Z விளங்க வைத்தது - **ஆர்.ராமசுப்ரமணி, திருவாரூர்.** ●ஆளுங் கட்சியின் சாயம் கேபிள் விவகாரத்தில் பிரதிபலித்தது - **பிரபாலிங்கேஷ், மேல கிருஷ்ணன் புதூர் - ஆர்.பி.ஜெயச்சந்திரன், பூனாம்பாளையம் - வள்ளியூர் ஏ.பி.எஸ். ரவீந்திரன்**

கிளைச் சாலை!

● சமீப காலம்வரை 'லைட் பாய்' என்றே அழைக்கப்பட்டவர்கள் இப்போதுதான் 'லைட் மேன்' ஆகியிருக்கிறார்கள். - **பா.க.மணியன், திருப்பூர்** ● வெளிச்சம் போடும் லைட் மேன்களின் வாழ்க்கை 'டார்க் ரூம் போல் இருண்டு கிடப்பதைப் படித்ததும் மனம் வருந்தியது. - **கே.கஸ்தூரி கதிர்வேல், வேலூர் - 6 - ராமலக்ஷ்மணன், கோவை**

சிறுகதைகள், கவிதை

●'புனிதப் பயணம்' சிறுகதை மூன்றாவது பரிசு பெற்றதில் வியப்பில்லை. மனதை நெகிழச் செய்த அற்புதமான படைப்பு - **ஜே.துரைராஜ், ஆலப்பாக்கம்** ● 'இலை மீறிய பூ' கவிதை இதயம் மீறி மனதைத் தொட்ட படைப்பு - **ஜெயந்தி சிவகுமார், ஏற்காடு**

மற்றவை

●ஏட்டுச் சுரைக்காய் போல எவ்வித பயனின்றியுள்ள சட்டங்களைப் பற்றிச் சுதந்திர தினச் சிந்தனையில் பட்டாசுகள் வெடித்திருக்கிறது 'ஆசிரியர் பக்கம்'. - **எஸ்.ஏ.கேசவன், கு.கழுகாசலபுரம்** ● தெய்வம் நின்று செய்யாது. செய்தால் அது தெய்வமாக இருக்காது என்ற கிரேஸியின் பதில் டாப் - **வே.ந.கதிர்வேல், வேலூர்** ● 'சீக்ரெட் ஆப் சிறுநீரகம்' எளிமையாக, படிக்கையிலேயே உற்சாகமாக உள்ளது. - **டி.எம்.பானுமதி, சென்னை**

# வேண்டும்!

● இருபதாயிரம் பேர் பாதிக்கப்பட, 750 பேருக்குத்தான் வேலை கிடைக்கும் என்பதைப் (கவர் ஸ்டோரி) படித்தபோது டைட்டானியம் தொழிற்சாலை தேவையில்லை என்றே தோன்றுகிறது - **என்.பாலகிருஷ்ணன், மதுரை - அ.ஞானசூரியன், இராஜபாளையம்** ● 'இந்தியாவை வல்லரசு' என்பதைவிட 'நல்லரசு' எனச் சொல்லும் வகையில் ஆளுவோர் செயல்பட வேண்டுமென தலையங்கம் உணர்த்தியது - **என்.சண்முகம், திருவண்ணாமலை - எஸ்.கே.வாலி, துறையூர்**

ஸ்பீட் போஸ்ட்




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்:
**லஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

ஆசிரியர் குழு :
**சா.ஜெயராஜ், ஆரணி யுவராஜ்**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி :
**2225 1522, 2225 0623, 2225 1324**

தொலைநகல் :
**044 - 22251021**

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
ஒரு வருடம் : ரூ. 440/-
ஆறு மாதம் : ரூ. 220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ்.டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.



* எஸ்.வி.சேகர்



* வசந்த்



* சுஹாசினி



* நாகேஷ்

'ஒரு குறிப்பிட்ட அழகு க்ரீமைப் பயன்படுத்தி சிவப்பானதால், மாதவனுடன் இணைந்து இரண்டாவது ஹீரோவாக நடிக்க தமக்கு வாய்ப்புக் கிடைத்தது என்று, புதுமுக நடிகர் ப்ரவின் சொல்லுவதாக ஒரு விளம்பரம் வருகிறது. அப்படியானால், சிவப்பாக இருப்பது ஒன்றுதான் சினிமாவில் நடிக்க தகுதியா? சிவப்பில்லாத பலரும் இன்று சினிமாவில் நடித்துப் பேரும் புகழும் பெற்றிருக்கிறார்களே! அது எப்படிச் சாத்தியமாயிற்று? என்று அடுக்கடுக்காய்க் கேள்விகள் நமக்கு எழுகின்றன. சினிமாவும்... சிவப்பழகும்! பற்றிய இந்தச் சர்ச்சை குறித்துத் திரை உலகத்தினர் சிலரின் கருத்து கேட்டபோது, காரசாரமாகவே பேசினார்கள்.

''செக்கச்செவேலென்று இருப்பது தமிழ் சினிமாவுக்கு ஒரு நெகடிவ் பாயின்ட்'' என்று தடாலடியாகச் சொல்கிறார் நடிகரும் இயக்குனருமான எஸ்.வி.சேகர். அவர் தமது மகன் அஷ்வினை கதாநாயகனாக அறிமுகப்படுத்துவதற்காகவே 'வேகம்' என்று ஒரு படத்தைச் சொந்தமாகத் தயாரித்துக் கொண்டிருக்கிறார். அஷ்வின் ரொம்பவும் சிவப்பு என்பதால், அவனுக்கு, மேக்-அப் மூலமாக ஸ்கின் டோனை கொஞ்சம் குறைத்திருக்கிறேன். ஹீரோ அழகாக இருக்க வேண்டும். ஆனால், சிவப்பு நிறம்தான் அழகு என்று அதற்கு அர்த்தமில்லை. இது ஹீரோயின்களுக்கும் பொருந்தும். அன்றைய சாவித்திரி தொடங்கி நேற்றைய சரிதா உட்பட பலர் சிவப்பு இல்லை. மக்கள் ஒரு நடிகையிடம் நடிப்பையும், நளினத்தையும்தான் எதிர்பார்க்கிறார்களே ஒழிய, அவர் கறுப்பா, சிவப்பா என்று பார்ப்பதில்லை. ரஜினி, கறுப்பு என்பதால் அவரை ரசிக்காமல் ஒதுக்கி விட்டார்களா? விளம்பரங்கள், எல்லாவற்றையும் மிகைப்படுத்துகின்றன. இந்தப் போக்கு இன்று மிகவும் அதிகமாகிவிட்டது. சிவப்பு மட்டுமே இன்று சினிமாவுக்குள் நுழைய அளவு கோல் என்பதை என்னால் ஏற்றுக்கொள்ள முடியாது'' என்கிறார் எஸ்.வி.சேகர்.

''நான் ஹீரோவானாலும் சரி, ஹீரோயினானாலும் சரி ஆள் கறுப்பா, சிவப்பா? என்று பார்ப்பதில்லை. அவர் கதாபாத்திரத்துக்குப் பொருத்தமாக இருப்பாரா என்று மட்டுமே பார்த்து முடிவு செய்கிறேன்'' என்கிறார் ஒளிப்பதிவாளரும், இயக்குனருமான கே.வி.ஆனந்த். நந்திதா தாஸ் கறுப்பு. ஆனால், அவரை வைத்து 'அழகி' என்று படம் எடுக்கவில்லையா? பூலான்தேவியின் வாழ்க்கையைத் திரையில் சித்தரித்த 'பேண்டிட் குயின்' படத்தில் அற்புதமாக நடித்த சீமா பிஸ்வாஸ் சிவப்பு கிடையாது.

# சினிமாவும்

நம் ஊரிலேயே சரிதாவும், ஷோபாவும் கறுப்பு நிறந்தான் எனினும், தங்கள் திறமையால் நடிப்பில் முத்திரைப் பதித்ததை மறக்க முடியுமா? இருநூறு வருட பிரிட்டிஷ் ஆட்சி இந்திய மக்கள் மத்தியில் குறிப்பாகத் தென்னிந்திய மக்களிடையே, சிவப்பு அல்லது வெள்ளை என்றால் உசத்தி என்ற தவறான எண்ணத்தை ஏற்படுத்திவிட்டது. தமிழ் இலக்கியங்கள் எதை எடுத்துக் கொண்டாலும், ஆண் ஆனாலும் சரி, பெண் ஆனாலும் சரி; அங்க அவயவங்களின் அமைப்பின் அடிப்படையில் தான் அழகு வர்ணிக்கப்படுகிறதே ஒழிய சருமத்தின் நிறத்தினால் இல்லை. கறுப்பாக, தடிமனான ஆசாமிகள்தான் வில்லனாக இருக்க வேண்டும் என்பதை மாற்றி, சிவப்பான பிரிதிவிராஜை நான் வில்லனாகப் போட்டேன். எனக்கு நடிகர், நடிகையரை விட கதாபாத்திரம்தான் முக்கியம் என்கிறார் கே.வி.ஆனந்த்.

இயக்குனர் வஸந்த் எதிர்பார்க்கும் அளவு கோல் : பார்வையாளர்களின் கவனத்தை ஈர்க்கும் ஏதாவது ஒரு விஷயம் நடிப்பவர்களிடம் இருக்க வேண்டும். லட்சணமான முகம் அவசியம். அவரது உடல் நிறம் எப்படி இருந்தாலும் காட்சியின் தேவைக்கு ஏற்ப மேக்-அப் மூலம் தேவையான நிறத்தைக் கொண்டு வந்துவிட முடியும். இல்லையெனில் இருக்கவே இருக்கிறது நவீன தொழில் நுட்பம். எனக்குப் பிடித்த நடிகைகள் தெற்கே ஷோபா, வடக்கே சுஷ்மிதா சென். இரண்டு பேருமே மாநிறம்தான் என்கிறார்.

நடிகர் நாகேஷ் சின்ன வயதில் துறுதுறு வென்று, ரொம்ப அழகாக இருப்பார். கல்லூரியில் படிக்கும்போது அம்மைத் தாக்குதலுக்குள்ளானதால் முகம் முழுவதும் அம்மைத் தழும்புகள். கண்ணாடியில் முகத்தைப் பார்த்துக் குலுங்கக்குலுங்க மகன் அழுவதைக் கண்டு மனம் துடித்து அவருடைய அம்மாகூட அழுதுவிட்டார். நகைச்சுவை நடிகராக பிரபலமான பிறகு, ஒரு ரசிகர் நாகேஷிடம் அவரது நடிப்பைப் பாராட்டியபோது, நாகேஷ், 'வீடுகளில் ஆட்டுக் கல்லை உளி கொண்டு நன்றாகப் பொளிந்தால், அதில் அரைக்கும் மாவு மிக நன்றாக இருக்கும்; அதில் செய்யும் இட்லி நன்றாக இருக்கும். என் முகமும் ஆட்டுக் கல் போலத்தான்... இறைவன் என்னுடைய சின்ன வயசில் என் முகத்தை அம்மை என்ற உளி கொண்டு நன்றாகப் பொளிந்து விட்டார். அதனால்தான் நடிப்பு என்கிற



* 'வெள்ளை' ரஜினி

# சிவப்பழகும்...

* கே.வி.ஆனந்த்

* கௌஸ் மொய்தீன்

இட்லி நல்லா வருது' என்று பதில் சொன்னாராம். இந்த நிகழ்ச்சியை நினைவு கூர்ந்து, நடிப்பு என்பது முகக் கவர்ச்சி, சருமநிறம் தொடர்புடையது அல்ல'' என்கிறார் நாகேஷ். தமிழ்த் திரைப்பட உலகின் நகைச்சுவை நடிகர்கள், குணச்சித்திர நடிகர்கள் பலர் சிவப்பு இல்லை; அவர்கள் அனைவரும் ரசிகர்கள் மனத்தில் இடம் பிடிக்கவில்லையா?

''கறுப்புத்தான் அழகு; காந்தலே ருசி, என்கிற கட்சி நான்'' என்கிறார் சுகாசினி. சிலருக்குக் கண்கள் கவனத்தை ஈர்க்கும் வகையில் இருக்கும்; சிலருக்குப் பாடி லாங்குவேஜ்; இன்னும் சிலருக்கு டைமிங் சென்ஸ். வேறு சிலருக்கு ஸ்டைல், இப்படி எவ்வளவோ இருக்கு. இவர்கள் எல்லோரும் சிவப்பாக இருக்க வேண்டிய அவசியமே இல்லை. ஆனாலும் சினிமாவில் நுழைந்து பிரபலமாக முடியும்; மிகவும் வெள்ளையாகவோ, சிவப்பாகவோ இருந்தால் அவரை மேக்-அப் மூலம் பிரவுன் நிறமாக்கித்தான் கேமரா முன் நிறுத்துவார்கள். 'அழகு' என்பது பார்ப்பவரின் கண்களில்தான் இருக்கிறது. சிவப்பு நிறத்தில் நிச்சயமாக இல்லை. என்னைப் பொறுத்தவரை பிரியங்கா சோப்ரா அழகி இல்லை; ஆனால், நந்திதா தாஸ் ரொம்ப அழகு. என் கண்ணோட்டத்தில், ராஜ்கிரணின் அழகு, இன்று இருக்கும் பல ஹீரோக்களுக்குக் கிடையாது...'' என்பது இவரது வாதம்.

மலையாளப் படங்களில் ஆரம்பித்து, இன்றைய தேதியில் தனுஷின் மேக்-அப் மேனாக இருக்கும் கௌஸ் மொய்தீனுக்கு, சினிமா உலகில் பதிமூன்று வருட அனுபவம். சிவப்பழகு இருந்தால் போதுமா சினிமா சான்ஸ் கிடைத்துவிடுமா?'' என்ற கேள்வியை அவர் முன் வைத்தோம். ''சினிமாத் துறையில் அனைவருமே அவரவர் கதாபாத்திரங்களுக்கு ஏற்ப மேக் அப் போட்டுக்கொண்டு - தோன்றுகிறார்கள். ஒவ்வொரு ஹீரோ, ஹீரோயினும் ஒவ்வொரு விதமான காம்பினேக்ஷனில் இருக்கிறார்கள். அவர்கள் அனைவருமே திரையில் அழகாகத் தோன்றுகிறார்கள். அவரவர் சரும நிறத்துக்கு ஏற்றதைத் தேர்ந்தெடுத்து பயன்படுத்த வேண்டியதுதான். இது தவிர, லைட்டிங் மற்றும் கேமரா கோணம் மூலமாகவும் ஒருவரை அழகாகக் காட்ட முடியும்.

இதெல்லாம் ஒரு பக்கம் என்றாலும், வெறும் சிவப்பு நிறத் தோற்றம் மட்டுமே சினிமாவில் நிலைத்து நிற்க போதுமானதில்லை.

– கௌதம் ராம்

சிவப்பழகு கிரீம் நிறுவனம் ஒன்று நடத்திய போட்டியில் கலந்துகொண்டு ஆயிரத்து அறுநூறு பேர்களிலிருந்து பல்வேறு கட்டங்களிலுமாகப் பல்வேறு உடல் மற்றும் அறிவுத் திறமைகள் அடிப்படையிலான போட்டிகளிலும் வெற்றி பெற்ற பின்னர் சினிமா வாய்ப்பு ப்ரவீனுக்கு கிடைத்திருக்கிறது. ''ஆர்யா படப் பிடிப்பின்போது யூனிட்டில் மாதவன் தொடங்கி அனைவரும் என்னை ஒரு புது முகம் போல நடத்தாமல் சகஜமாக நடத்தியது ஒரு ஜாலி அனுபவம் என்று கூறும் ப்ரவீனிடம், சினிமாவில் நடிக்க சிவப்பழகு மட்டுமே போதுமா?'' என்று கேட்டால், ''சிவப்பழகு என்பது ஒரு விசிடிங் கார்டு போலத்தான். அதற்காக கறுப்பு மட்டமில்லை. திறமையில்லாவிட்டால் சினிமாக் கடலில் மூழ்கிவிட வேண்டியது தான்'' என்கிறார்.

* ப்ரவீன்



# பூண்டி மாதா பேராலயம்

**பூண்டி, தஞ்சாவூர்**-613 105 ☎04362-280422

**தமிழ்நாடு–தென்னிந்தியா**

## புனித கன்னிமரியாளின் பிறப்பு பெருவிழா

**ஆகஸ்டு 30 முதல் செப்டம்பர் 9, 2007 வரை**

| | |
|---|---|
| 30.08.2007 வியாழக்கிழமை<br>மாலை 5.30 மணிக்கு<br>Thursday 5.30 P.M. | **கொடியேற்றம்**<br>குடந்தை மறைமாவட்டப் பரிபாலகர்<br>**மரியாள்: அர்ப்பணத்தின் நிறைவு** |
| 31.08.2007 வெள்ளிக்கிழமை<br>மாலை 6.00 மணிக்கு<br>Friday 6.00 P.M. | அருட்திரு. **மைக்கேல் ராஜ் செல்வம்**<br>தமிழக நற்செய்தி பணிக்குழு செயலர், சேலம்.<br>**மரியாளின் மனித நேயம்** |
| 01.09.2007 சனிக்கிழமை<br>மாலை 6.00 மணிக்கு<br>Saturday 6.00 P.M.<br>9.00 P.M. to 12 P.M. | அருட்திரு. **ஸ்டீபன்**<br>துணை அதிபர், தூய பவுல் குருகுலம், திருச்சி<br>**"முழு விடுதலை அடைந்த மரியாள்"**<br>**அன்பிரவு வழிபாடு** அருட்திரு. **V.பெர்னார்டு ஜோசப்**<br>மறைப்பணி நிலைய இயக்குநர், சேலம் |
| 02.09.2007 ஞாயிற்றுக்கிழமை<br>மாலை 6.00 மணிக்கு<br>Sunday 6.00 P.M. | அருட்திரு. **பிச்சைமுத்து**<br>மறைப்பணி நிலைய இயக்குநர், பாண்டிச்சேரி<br>**"மரியாள் இறைவனின் ஆலயம்"** |
| 03.09.2007 திங்கட்கிழமை<br>மாலை 6.00 மணிக்கு<br>Monday 6.00 P.M. | மேதகு. **அமல்ராஜ் D.D.,**<br>உதகை மறைமாவட்ட ஆயர்<br>**"மரியாள்: இறையன்பில் உறைபவர்"** |
| 04.09.2007 செவ்வாய்க்கிழமை<br>மாலை 6.00 மணிக்கு<br>Tuesday 6.00 P.M. | அருட்திரு. **ஆன்ட்ரு**<br>பேராசிரியர், தூய பவுல் குருகுலம், திருச்சி<br>**"மரியாள் முப்பொழுதும் கன்னி"** |
| 05.09.2007 புதன்கிழமை<br>மாலை 6.00 மணிக்கு<br>Wednesday 6.00 P.M. | அருட்திரு. **ஜோ.பெர்னான்டஸ்**<br>இயக்குநர், மறைமொழிவோளர் குழுமம், சென்னை.<br>**"மரியாள் சுமந்த சிலுவைகள்"** |
| 06.09.2007 வியாழக்கிழமை<br>மாலை 6.00 மணிக்கு<br>Thursday 6.00 P.M. | அருட்திரு.**A.ஜோசப் S.J.**<br>பேராசிரியர், புனித வளனார் கல்லூரி, திருச்சி<br>**"மரியாள் ஒரு இறைவாக்கினர்"** |
| 07.09.2007 வெள்ளிக்கிழமை<br>மாலை 6.00 மணிக்கு<br>Friday 6.00 P.M. | அருட்திரு.**R.D.ஜெரோம்**<br>பேராசிரியர், நல்லாயன் குருகுலம், கோயம்புத்தூர்.<br>**"மரியாள் கண்ட புதுவிடியல்"** |
| 08.09.2007 சனிக்கிழமை<br>மாலை 6.00 மணிக்கு<br>Saturday 6.00 P.M.<br>இரவு 9.30 மணிக்கு | முன்னுரை பேரருட்திரு.**A.சந்தியாகு** V.F.மைக்கேல்பட்டி<br>மேதகு. **"பீட்டர் ரெமிஜியுஸ் D.D.**<br>கோட்டாறு மறைமாவட்ட ஆயர்<br>**"மரியாள் கருணையின் கருவூலம்"**<br>**அலங்கார தேர்பவனி** |
| 09.09.2007 ஞாயிற்றுக்கிழமை<br>மாலை 6.00 மணிக்கு<br>Sunday 6.00 P.M.<br>மாலை 5.15 மணிக்கு | திருவிழா கூட்டுத்திருப்பலி<br>மேதகு.**"பீட்டர் ரெமிஜியுஸ் D.D.** ஆயர் மற்றும் குருக்கள்<br>**"மரியாள் தாய்மைக்கு இலக்கணம்"**<br>திருப்பலியைத் தொடர்ந்து **அலங்கார தேர்பவனி** நடைபெறும். |

*அனைவரும் வருக! மாதா அருள் பெறுக!!*

அன்பின் அழைப்பில்......

அருட்திரு. **L.குழந்தைசாமி** பங்குத்தந்தை

அருட்திரு. **S.சின்னப்பன்** இணைப் பங்குத்தந்தை

அருட்திரு. **ராஜமாணிக்கம்** உதவிப் பங்குத்தந்தை

அருட்திரு. **A.பெனடிக்ட் பிரபாகரன்** உதவிப் பங்குத்தந்தை

அருட்திரு. **A.டேவிட் குழந்தைசாமி** S.J.ஆன்மீகத்தந்தை



Rev.Fr. **L.குழந்தைசாமி**
அதிபர், பங்குத்தந்தை
பூண்டி மாதா பேராலயம்,
பூண்டி, திருக்காட்டுப்பள்ளி (வழி)
தஞ்சாவூர். - 613 105.
www.poondimadha.org
www.poondimadha.org
Email:poondimadha@hotmail.com
Poondimadha@rediffmail.com

சர்வஜித் போட்டி - யில் இசையமைப்பாளர் பரத்வாஜால் தேர்ந்தெடுக்கப்பட்டு, பரிசுபெற்ற கல்லூரி மாணவ, மாணவியர்களை நினைவிருக்கிறதா? அவர்களில் மாணவி வைஷ்ணவி, பரத்வாஜை சந்தித்து அவர் கையால் ஆடியோ சிஸ்டத்தைப் பெற்றுக் கொண்டார். தொடர்ந்து இருவருக்கிடையே நடந்த உரையாடல்.

**வைஷ்ணவி:** நான் உங்க தீவிர ரசிகை. இப்ப ரிலீசாகி இருக்கிற 'பள்ளிக்கூடம்' படத்தின் பாடல்களை ரொம்பவே ரசிச்சேன். இந்த மாதிரி வித்தியாசமான படங்களுக்காக ஹோம் ஒர்க் செய்வீங்களா?

**பரத்வாஜ்:** ஒவ்வொரு படத்துக்குமே நான் ஹோம் ஒர்க் செய்துட்டுத்தான் இருக்கேன். பத்து வருஷத்துக்கு மேலே இந்த பீல்டுல இருக்கேன். இயல்பாவே எனக்குப் படத்துக்குப் படம் வித்தியாசமா மெலடி. அப்புறம் ஜெமினியில 'ஓ போடு', ஆட்டோகிராஃப் படத்துல 'ஒவ்வொரு பூக்களுமே...' இப்படிச் சொல்லிட்டே போகலாம்.

**வைஷ்ணவி:** உங்களுக்கு நடிக்கிற ஆசை உண்டா?

**பரத்வாஜ்:** சில பேர் நடிக்கச் சொன்னாங்க. நான் மறுத்துட்டேன்.

**வைஷ்ணவி:** எதிர்காலத்துல அப்படி நடிக்கிறதா இருந்தா யாரை ஹீரோயினா போடச் சொல்வீங்க.

**பரத்வாஜ்:** இதென்னடா வம்பா இருக்கு. நடிக்கிற ஆசைன்னதும் அப்பா கேரக்டரைக் கேட்கறீங்கன்னு நினைச்சேன். ஹீரோவாக்கிட்டீங்களே!

அந்தச் சமயத்துல யார் பாப்புலரா இருக்காங்களோ அவங்கதான்.

**வைஷ்ணவி:** அப்போ, இப்ப நடிச்சிங்கன்னா ஸ்ரேயாவோட நடிப்பீங்களா?

**பரத்வாஜ்:** விடமாட்டீங்க போலிருக்கே. இந்த விளையாட்டுக்கு நான் வரலை. வேற கேள்விக்கு ஜம்ப் பண்ணுங்க, ப்ளீஸ்...?

# ஹீரோ பரத்வாஜ்



பரிசு பெறும் வைஷ்ணவி

**வைஷ்ணவி:** சரி சார், மியூசிக் டைரக்டராக என்ன தகுதி இருக்கணும்?

**பரத்வாஜ்:** நிறைய சொல்லலாம். மற்ற கலைஞர்கள் தங்களுக்குத் தெரிந்ததை மக்களுக்குக் கொடுப்பாங்க. நாங்க மத்தவங்களுக்கு என்ன பிடிக்கும்னு பார்த்து அவங்க கேட்கறதைக் கொடுப்போம். கிரியேட்டிவிடி ரொம்ப முக்கியம். ஒரு பாட்டுல அத்தனைப் பேரையும் கவரணும். இளைஞருக்குப் பிடிக்கும்னு போட்ட டியூனை 'என்ன இப்படி இரைச்சல் பண்ணியிருக்கா'ன்னு பெரியவங்க திட்டுவாங்க. சரி பெரியவங்களுக்கு டியூன் போடலாம்னா, இளைஞர்கள் 'என்ன இப்படி அறுக்கறான்'னு சொல்லிடுவாங்க. இந்த மாதிரி விமர்சனங்களை,

அமைஞ்சுடும். அதை என்னோட அதிர்ஷ்டம்னுகூட சொல்லலாம். என்னோட முதல் படம் 'காதல் மன்னன்'. அதுல வந்த 'உனை பார்த்த பின்பு நான்...' அழகான



வர்றாங்க. நீங்க யாருக்கு ஓ.கே. சொல்வீங்க.

**பரத்வாஜ்:** என்னை எப்படி யாவது மாட்டிவிட ட்ரை பண்றீங்க. இதுக்கு நான் சுலபமா பதில் சொல்லிடு



கோபப்படாம சந்திக்கிற பக்குவம் ரொம்ப அவசியம்.

**வைஷ்ணவி:** நீங்க ரொம்ப

# ஹீரோயின் ஸ்ரேயா!

நல்லா டியூன் போட்டு, அந்தப் பாடலைச் சரியா காட்சியமைக்காம, போன துண்டா?

**பரத்வாஜ்:** இருக்கு. அதுக்காக டைரக்டரைச் சட்டுன்னு குற்றம்சாட்ட முடியாது. அவருக்கு எத்தனையோ பிரச்னைகள் இருக்கும். அவுட்டோர்ல எடுக்க நினைச்சப்ப மழை வந்திருக்கலாம். குறிப்பிட்ட இடத்துல எடுக்க அனுமதி கிடைக்காம போயிருக்கலாம். பைனான்ஸ் பிராப்ளம்... இந்த மாதிரி சமயத்துல கொஞ்சம் வருத்தம் ஏற்படும். மனசை ஆறுதல் படுத்திக்கிட்டு அடுத்த வேலையைக் கவனிப்பேன்.

**வைஷ்ணவி:** மறுபடியும் ஒரு வம்பு கேள்வி. உங்களுக்கு ஹாலிவுட்ல மியூசிக் பண்ண சான்ஸ் வருது. அதே சமயம் 'சூப்பர் ஸ்டார்' படத்துக்குக் கேட்டு வேன். ஹாலிவுட்ல பணம் நிறைய கிடைக்கலாம். ஆனா, நம்ம தமிழ் ரசிகர்களிடமிருந்து கிடைக்கிற பாராட்டு அதுக்கு ஈடாகாது. ஸோ, சூப்பர் ஸ்டார் படத்துக்குதான் ஓ.கே. சொல்வேன்.

**வைஷ்ணவி:** உங்களின் இசை வாரிசா உங்க பேமிலியில இருந்து யாராவது வந்திருக்காங்களா?

**பரத்வாஜ்:** என்னோட மகள் ஜனனி 'பள்ளிக்கூடம்' படத்தில் வர்ற 'இந்த நிமிடம் இந்த நிமிடம்...' பாடலை பாடி இருக்காங்க. 'அய்யா' படத்தில் 'அத்தரி பத்தரி கத்தரிக்காய்' அவங்க பாடினதுதான். வருங்காலத்துல மியூசிக் டைரக்டரா வருவாங்களான்னு தெரியலை.

– **யுவா**

# நீங்கள் கேட்டவை

# தராசு

● வெ.கல்யாணி, திருநெல்வேலி

? மாணவ-மாணவியரைக் கட்டாயப் படுத்தி பெரியார் படத்துக்கு அழைத்துச் சென்றது எந்தவிதத்தில் நியாயம்?

! பெரியார் படத்தை எந்த அளவுக்கு ரசித் தார்களோ என்னவோ, கட்டாயப் பாடத் திட் டத்திலிருந்து சிலமணி நேரம் விடுதலை பெற்று, சினிமா பார்க்கப் போகிறோம் என்பதில் மகிழ்ந்திருப்பார்கள் நிச்சயம்!

● கே.எஸ்.கோவர்த்தனன், சென்னை - 42

? திருச்சி மருத்துவமனையில் போதுமான மருத்துவர்கள் இல்லாததால் நர்சுகளே அரை குறையாகப் பிரசவம் பார்ப்பதாக, சட்ட சபைக் குழுவினர் புகார் கூறுகிறார்களே?

! தமிழக அரசின் சுகாதார திட்டங்கள் குறைப் பிரசவமாகிவிடாமல் கே.கே.எஸ். எஸ்.ஆர். ஊட்டச்சத்துக் கொடுத்து நன்கு கவனித்துக் கொள்ளட்டும்.

● எம்.பாஸ்கர், திண்டுக்கல்

? மும்பையில் அவுட்லுக் அலுவல கத்தைச் சிவசேனா தொண்டர்கள் சேதப்படுத்தியிருக்கிறார்களே?

! தப்புதான்; சந்தேகமே இல்லை. ஆனால், பால்தாக்கரேயைப் பதினொரு வில்லன்கள் வரிசையில் எட்டாவதாகச் சேர்த்து, அவருக்கு ஹிட்லர் மீசையும் ஒட்ட வைத்தபோதே இப்படி எதிர்ப்பு தோன்றும் என்று 'அவுட்லுக்' எதிர்பார்த் திருக்க வேண்டாமோ? தாக்கப்படுவதை விரும்பிச் செய்த காரியமாக அல்லவா தோன்றுகிறது!

● பொன்வழி, அன்னூர்

? கருணாநிதி ஓர் அரசியல் ஞானி என்று சோனியா பாராட்டியுள்ளது பற்றி...?

! ஆமாமாம்! டெல்லியில் கூட்டணி தொடரும்வரை ஞானி தான்! தமிழக அரசுக்குக் காங்கிரஸ் ஆதரவு தொடரும் வரை சோனியாவும் ஞானிதான்!

● ஜோ.ஜெயக்குமார், நாட்டரசன்கோட்டை

? கூட்டணியிலிருந்து கொண்டே அரசை எதிர்த்துப் போராடும் பழக்கத்தை தி.மு.க.தான் துவக்கி வைத்துள்ளது என்று இல.கணேசன் கூறியுள்ளாரே?

! வியாசர் கூற, கணேசர் எழுதிய இதிகாச காலத்திலேயே நடந்த கதைதான்.



* சர்ச்சையின் மையம்

* கூட்டணி ...

* ... ஞானம்!

* இதிகாச உண்மை!

● ஜெகா, கும்பகோணம்

*? நியாயமாக நமக்குச் சேர வேண்டிய தண்ணீரை மறுத்த கர்நாடகம், வெள்ளத்தினால் பாதிக்கப்படும்போது மட்டும் அணைகளைத் திறந்துவிட்டு தமிழ்நாட்டில் சேதம் ஏற்படுத்துவது என்ன நியாயம்?*

!இதென்ன இப்படிக் கேட்கறீங்க; அணையைத் திறக்காம வைச்சிருந்தா அது சேதமடைந்து, பாயும் தண்ணீர் தமிழகம் நோக்கித்தானே எப்படியும் வரும்? வெள்ளமோ, வறட்சியோ - இரண்டுக்குமே இயற்கையின் தவறுகளைவிட மனிதனின் தவறுகளே முதல் காரணம்.

● கே.வி.கே. ரகுபதி, மேல்மங்கலம்

*? ''கல்வெட்டுகளை ஆராய்ந்து பார்த்த பின்புதான் கல்கி கதைகளை எழுதுவார்'' என வைகோ புகழாரம் சூட்டியுள்ளது குறித்து...?*

! உண்மைதான். கல்வெட்டுகளை மட்டுமின்றி அவற்றில் இடம்பெற்ற மாந்தர்களின் மனங்களையும் அவற்றை வடித்த மன்னர்களின் மனங்களையும், ஆழ்ந்து ஆராய்ந்ததாலேயே அவர் எழுத்து இன்னும் வாசம் கமழ வளைய வருகிறது. வைகோ போன்றவர்களின் ரசனையைக் கவர்கிறது.

● கே.சண்முகம், ஆதமங்கலம்புதூர்

*? சர்ச்சை வரவேண்டும் என்பதற்காகவே தஸ்லிமா நஸ்ரீன் எழுதுகிறாரா? அல்லது அவர் யதார்த்தமாக எழுதுவதுகூட சர்ச்சையாகிவிடுகிறதா?*

! சர்ச்சைக்குரிய விஷயங்களை எழுதினால் பொறுக்காதவர்கள் யதார்த்தங்களையும் சர்ச்சையாக்குவார்கள். சர்ச்சையோடு நிறுத்தாமல் அடி-தடியில் இறங்குவதுதான் ஏற்க முடியாதது; கண்டனத்துக்குரியது.

● எஸ்.உஷா சுதர்ஷன், திருச்செங்கோடு

*? தமிழக அரசு, அடையாறு பூங்காவுக்கு நூறு கோடி செலவழிப்பதற்குப் பதிலாக, ஐந்துகோடி அல்லது பத்து கோடி செலவில் பல பூங்காக்களை உருவாக்கியிருக்கலாமே?*

! அடையாறு பூங்கா வழக்கமான உல்லாசப் பூங்கா அல்ல; அடையாறு நதி முகத்துவாரத்தில் உள்ள அபூர்வ உயிரினங்களைப் பாதுகாத்துப் பேணும் வனவிலங்குப் பூங்கா - சரணாலயம். எனவே, செலவு அதிகம். சுற்றுச் சூழல் சமநிலை காக்கும் நோக்கில் அவசியமும் கூட.

● ஆர்.ராமசுப்ரமணியன், வடவள்ளி

*? எந்த நல்ல நாளானாலும் நடிக-நடிகையர் அல்லது குறிப்பிட்ட பட்டிமன்ற பேச்சாளர்களைக் கொண்டு, குறிப்பிட்ட தொலைக்காட்சிகள் நிகழ்ச்சிகள் ஒளிபரப்புவது சலிப்பூட்டுகிறதே?*

! அ தை த வி ட க்



* அழகு விளக்கம்!

# சுவிஸ் வங்கியில் 108 லட்சம் கோடி இந்திய பணமாமே?



கொடுமை, நகைச்சுவை என்கிற பெயரில் பெண்ணை ஆண் இழிவு படுத்துவதும், ஆணைப் பெண் மட்டம் தட்டுவதும், அதைக் கேட்டுக் கூட்டம் 'கெக்கே பிக்கே' என்று சிரிப்பதும்... இந்தப் பட்டிமன்றங்கள் அமெச்சூர் டிராமா பார்த்த உணர்வைத்தான் தருகின்றன.

● சி.என்.ரமாதேவி, சின்னவேடம்பட்டி

*? புதுச்சேரி முதல்வர் ரங்கசாமியின் பிறந்த நாளுக்கு சிவாஜி பட ரஜினி கெட்டப்பில் கட்அவுட்கள் வைத்திருப்பது வியப்பைத் தரவில்லை?*

! இல்லை. அரசியலுக்கும் சினிமாவுக்கும் இடையே இடைவெளி நாளுக்குநாள் குறைந்து கொண்டே வருவதால்.

● எம்.அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி



* அநாகரிகப் பேச்சு!

*? ஆசிரமத்தில் தங்கிப் படிக்கும் ஏழைக் குழந்தைகளைப் பாதுகாப்பதே என் கடமை என்கிறாரே ஜாமீனில் வந்துள்ள பிரேமானந்தா?*

! அக்குழந்தைகளின் பாதுகாப்புக்குத் தமிழக அரசு உடனடியாகப் பொறுப்பேற்று, அவர்களைத் தனியார் நடத்தும் கௌரவமான சிறுவர் இல்லங்களுக்கு மாற்றுவது அவசியம்.

● இரா.சாந்தகுமார், திருவள்ளூர்



* வில்லன்கள் வரிசையில்...!

*? சுவிஸ் வங்கியில் 108 லட்சம் கோடி இந்தியப் பணம் டெபாசிட் ஆகியிருக்கிறதாமே?*

! சுதந்திர வைரவிழா சாதனை!

● எஸ்.முரளி, குறிஞ்சிப்பாடி

*? ஒரு பெண்ணை, அவளுடைய மனசுக்காக நேசிக்கும் ஒவ்வொரு ஆணும் அழகன் தான் என்கிறாரே நதியா?*



* ஆபத்தில் குழந்தைகள்!

! ஓர் ஆணை அவன் குணத்துக்காக நேசிக்கும் ஒவ்வொரு பெண்ணும்கூட அழகிதான்.

● என்.பாலகிருஷ்ணன், மதுரை

*? கேபிள் டீ.வி இணைப்பை அரசுடைமை யாக்குவதை வரவேற்கிறீர்களா?*

! அரசுடைமையாக்குவது இப்போதைய தமிழக அரசின் திட்டமல்ல. போட்டி உருவாக்கி ஏகபோகத்தைத் தடுப்பது மட்டுமே உத்தேசம்.

● குலசை க.மீ.நஜ்முதீன், காயல்பட்டினம் ★

*? வறுமையை விடக் கொடிய நோய் உண்டா?*

! உண்டு! அதன் பெயர் சோம்பல். ஆரம்பத்தில் சுகமாக வைத்திருக்கும். பிறகு, கொஞ்சம் கொஞ்சமாகக் கொல்லும் நோய். ●

□ ரூ.100/- பரிசு பெறுபவர்:
கே.சண்முகம், ஆதமங்கலம்புதூர்

★ ரூ.50/- பரிசு பெறுபவர்:
குலசை க.மீ.நஜ்முதீன், காயல்பட்டினம்

## கல்விக்கு உதவி;

# கல்கியில் அறிவுரை!

"குழந்தைத் தொழிலாளியாக இருந்த சிறுவனைப் படிக்க வைப்பதே ஒரு சாதனைதான். அந்தப் பையன் பன்னிரண்டாம் வகுப்பு தேர்வில் பள்ளியிலே முதல் மாணவனாக வருவது அதைவிடப் பெரிய சாதனை. எந்தச் சூழ்நிலையில் முதல் மாணவனாக வந்தான் என்று தெரிந்தால், அதிர்ச்சி அடையாமல் இருக்கவே முடியாது. தேர்வு அன்று தான் அந்தப் பையனுடைய தாயின் மரணம். வீட்டில் தாயின் சடலம் கிடக்க, சோகத்தின் அழுத்தத்திலும் தேர்வு எழுதி, முதல் மாணவனாக வந்திருக்கிறான் மாணவன் மணிகண்டன்.

கட்டடத் தொழிலாளியாக வேலை செய்து, கிடைத்த கூலியைக் கொண்டு பரீட்சைக்குப் பணம் கட்டிய மாணவன், தகப்பன் குடிகாரன் என்பதால் அம்மா கூலி வேலை செய்து படிக்க வைத்த மாணவி, வறுமையின் பிடியில் சிக்கிய குடும்பமாக இருந்தாலும், படித்து நல்ல மார்க் வாங்கியவர்கள், இப்படிப்பட்டவர்களுக்கு தலா பத்தாயிரம் ரூபாய் உதவித் தொகை வழங்கிய நிகழ்ச்சி. சிவகுமார், சூர்யா, கார்த்திக் என்று மூன்று சினிமா பிரபலங்கள் நடத்திய நிகழ்ச்சி என்றாலும் துளிக்கூட சினிமாத்தனம் இல்லாமல் மனத்துக்கு நெகிழ்ச்சியாகவும், மகிழ்ச்சியாகவும் இருந்தது.

இருபதெட்டு ஆண்டுகளுக்கு முன்பு நடிகர் சிவகுமாரால் மிகச் சிறிய அளவில் ஆரம்பிக்கப்பட்ட அறக்கட்டளை ஆலமரமாக வளர்ந்து, பொதுத்தேர்வில் முதல் மார்க் வாங்கியவர்கள். தவிர, பார்வையற்ற மாணவிகள் என்று பலதரப்பினருக்கும் இந்த ஆண்டு ஒன்றரை லட்சம் ரூபாய் வழங்கி இருக்கிறது. தவிர, அகரம் பவுண்டேஷன் என்ற பெயரில் இன்னும் ஓர் அறக்கட்டளை தொடங்கி, செங்கல்பட்டு அருகில் உள்ள ஒரு கிராமத்தில் இருக்கும் ஆதி திராவிட மாணவர்களுக்கான சிறப்புப் பள்ளியையும் தத்தெடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

உதவித்தொகையைப் பெற்றுக்கொண்ட மாணவ, மாணவிகள் கண்கலங்க நிகழ்த்திய ஏற்புரை மனதைத் தொட்டது. ஒரு மாணவி, "சூர்யா கல்கியில் எழுதிய தொடரில், தனது அப்பா சிவகுமார் தனக்குக் கூறிய பல நல்ல அறிவுரைகளைப் பற்றி விரிவாக எழுதி இருந்தார். அந்த அறிவுரைகளை எங்களுக்கும் சேர்த்துக் கூறியதாக எடுத்துக்கொண்டு பயன் அடைந்திருக்கிறோம் என்று கூறினார். இன்னொரு மாணவி பேசும்போது, பாதியில் பேச்சை நிறுத்திவிட்டு உணர்ச்சி வசப்பட்டு அழுதுவிட, சூர்யா அந்தப் பெண்ணை ஆதரவுடன் தட்டிக் கொடுக்க, சிவகுமார் தமது கர்சீப்பை எடுத்து நீட்டினார்.

– கௌதம்





# கல்கி




2007 செப்டெம்பர் 2
சர்வஜித் ஆவணி 16
மலர் : 66
இதழ் : 5


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்.*

## பொது வாழ்வுக்குப் பொருந்தாத அநாகரிகம்!

**அ**நாகரிகமாகவும் அதிகப்பிரசங்கித்தனமாகவும் பேசிய தூதர் ரொனேன் சென் மீது உரிமை மீறல் நடவடிக்கை எடுக்க எம்.பி.க்கள் யோசித்து வருகிறார்கள்.

''தலை வெட்டுண்ட கோழிகள்போல் பதறிப்போய், சுற்றிச் சுற்றி வருகிறார்கள்'' என அவர் எடுத்தாண்ட உதாரணம் கடுமையான ஆட்சேபணைக்குரியதுதான். ''எம்.பி.க்களைக் குறிப்பிடவில்லை; பொதுவாக அணுசக்தி ஒப்பந்தம் குறித்த எதிர்ப்பு மனோநிலையைத்தான் குறிப்பிட்டேன்; இணைய இதழ் பேட்டியில் இவ்வாறு கூறவில்லை; ஆஃப் தி ரெகார்ட் தான் பேசினேன்...'' என்றெல்லாம் அவர் சமாதானம் கூறலாம். ஆனால், அணுசக்தி ஒப்பந்தம் தொடர்பாக அனைத்துத் தரப்பிலும் உணர்ச்சிகள் பொங்கிப் பிரவகித்துக் கொண்டிருக்கிற போது, அமைதி காப்பதற்குப் பதிலாக, உணர்ச்சிகளை மேலும் தூண்டும் விதத்தில் தரக்குறைவாகப் பேசும் ஒருவர், எவ்வாறு சிறந்த தூதராக இருக்க முடியும்! 'சென் அமெரிக்காவுக்கான இந்தியத் தூதர் அல்ல, ஜார்ஜ் புஷ்ஷின் பர்சனல் தூதர்' என எதிர்க்கட்சியினர் சாடுவதற்கு இடங்கொடுத்துவிட்டார்!

நமது தூதரக அதிகாரிதான் இங்கிதமின்றிப் பேசுகிறார் என்றில்லை. நாடாளுமன்றம் அளிக்கும் பாதுகாப்பில், என்ன வேண்டுமானாலும் பேசலாம் என்று அதன் உறுப்பினர்களும் நினைக்கிறார்கள்!

ஜார்ஜ் ஃபெர்னாண்டஸ், பிரதமர் மன்மோகன் சிங் பற்றிப் பேசிய வார்த்தைகள், யாருமே பேசக் கூடாதவை. ஆனால்,






அவ்வாறு பேச தமக்கு முழு உரிமை உண்டு என்று மறுமுறையும் சொல்லிக் காட்டியிருக்கிறார் ஃபெர்னாண்டஸ்!

ரொனேன் சென்னின் பேச்சும் சரி, ஃபெர்னாண்டஸ்ஸின் பேச்சும் சரி, நாகரிக எல்லைகளை மீறுவதுடன் குரூர சிந்தனைகளை உள்ளடக்கியவை.

முன்னுதாரணமாக விளங்க வேண்டிய தலைவர்கள், பொதுவாழ்வுப் பிரமுகர்கள் இவ்வாறு 'வழிகாட்டி'னால் சமுதாயம் மெல்லுணர்வுகளை இழந்து, அநாகரிகங்களை நடைமுறையாகக் கொள்ள ஆரம்பித்துவிடும்.

நாடாளுமன்றத்தை விருப்பு - வெறுப்பின்றி நெறிப்படுத்தவேண்டிய சபாநாயகர் சோம்நாத் சாட்டர்ஜியோ, 'மன்றத்துக்கு வெளியே பெர்னாண்டஸ் பிரதமரை இழிவுபடுத்தியதைத் தம்மால் தட்டிக்கேட்க முடியாது' என்கிறார். ஆனால், 'சென் பேச்சைக் கேட்டுக் கொண்டு நாடாளுமன்றம் சும்மா இராது!' என்று எச்சரிக்கை விடுக்கிறார்! பெர்னாண்டஸுக்கு ஒரு நீதி, சென்னுக்கு ஒரு நீதி கடைப்பிடிக்கும் சபாநாயகரின் மனத்தையும் அரசியல் சார்புதானே ஆட்டுவிக்கிறது!

எதிர்க்கட்சியினரைப் பொதுக்கூட்டங்களில் இழித்துப் பேசுவது, தனி நபர் தாக்குதலில் ஈடுபடுவது போன்றவை நாடெங்கும் இருக்கின்றன. அதிலும் தமிழகத்தில் இப்போக்கு மிக அதிகம். அண்மையில், அ.தி.மு.க. பொதுச் செயலாளர் ஜெயலலிதா, அணு சக்தி ஒப்பந்தம் தொடர்பாக பிரதமரைத் தகாத வார்த்தைகளால் தாக்கி, எல்லோரையும் அதிர்ச்சி அடையச் செய்திருக்கிறார்.

அரசியலுக்கு வந்துவிட்டாலும் சரி, பொதுவாழ்வில் ஈடுபட்டாலும் சரி, எல்லோரும் எப்போதும் நூறு சதவிகிதம் சரியான முடிவுகளை எடுத்துவிட முடியாது. எடுக்கும் முடிவுகளுக்கு அனைவரது ஒப்புதலையும் பெற்றுவிடவும் முடியாது.

ஆனால், அரசியலுக்கும் பொதுவாழ்வுக்கும் வரும் எல்லோரும், எப்போதுமே நாகரிகமாகவும் பண்பாடுடனும் நடந்துகொள்ள முடியும்; நடந்து கொள்ள வேண்டும். அவ்வாறு இன்று யாருமே நடந்து கொள்வதில்லை என்பதுதான் இந்தியாவின் மிகப் பெரிய துரதிர்ஷ்டம். ●





# கடவுளின்

**★ ஆர்.கோபாலன், மேற்கு மாம்பலம்**
**மனித உருவத்தின் 'டிஸைன்' கடவுளுக்கு எப்படிக் கிடைத்தது?**

நீரில் மட்டுமே வாழும் மீன், நீரிலும் நிலத்திலும் வாழும் ஆமை, நிலத்தில் வாழும் பன்றி, பாதி சிங்கம் பாதி மனிதனாக நரசிம்மம், குள்ள வாமனன், கோபக்காரப் பரசுராமன், குணநலத்தில் சிறந்த முழுமனிதனாக இராமன், மனிதனில் மேம்பட்ட சூப்பர்மேனாக கிருஷ்ணன் என்று விஞ்ஞான பூர்வமாக, படிப்படியாகப் பரிணாம வளர்ச்சியில் மனித உருவை தசாவதாரமாக டிஸைன் செய்தார் கடவுள். ஆனால், இந்தக் கடவுள்களின் டிஸைன் மனிதனுக்கு எப்படிக் கிடைத்தது என்பது அந்தக் கடவுளுக்குத்தான் வெளிச்சம்.

**★ டி.ஜெய்சிங், கோயம்புத்தூர்**
**சிலர் சிரிப்பர்? சிலர் அழுவர்? நீங்கள்...?**

அழும் அந்தச் சிலரை, 'சிரிக்கும் சிலர்' என்று ஆக்க முயல்வதல்லால் வேறொன்றும் அறியேன் பராபரமே.

**★ அ.ராஜா ரஹ்மான், கம்பம்**
**கூலி - சம்பளம் இரண்டுக்கும் உள்ள வேறுபாடு என்ன?**

செய்த வேலைக்குக் கிடைப்பது கூலி. செய்தாலும், செய்யாவிட்டாலும் கிடைப்பது சம்பளம்.

**★ பி. சிவா, பாளையங்கோட்டை**
**ஒன்றை இழந்துதான் இன்னொன்றைப் பெற முடியுமா?**

கடவுளிடத்தில் தன்னை இழந்து பக்தன் மோட்சம் பெறுகிறான். கணவனிடத்தில் தன்னை இழந்து மனைவி தாய் ஸ்தானத்தைப் பெறுகிறாள். எதை இழக்கிறோம் என்பதைவிட யாரிடம் இழக்கிறோம் என்பதுதான் முக்கியம்!

**★ ஜனனி, வேலூர்**
**உங்களைப் பொறுத்தவரையில் ஆண்டவன் என்பவர்?**

என் வேலைகளை செவ்வனே செய்து முடிக்கும் என் எஜமானர்.

**★ என்.ஷண்முகம், திருவண்ணாமலை**
**'வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்' சரியா...?**











# மனித டிஸைன்!

ராமாயண காலத்தில் சீதையை காகம் தீண்டித் துன்புறுத்தியது. வில்லவன் ராமன் நினைத்திருந்தால், அம்பு எய்து அந்தக் காகத்தைக் கொன்றிருக்கலாம். வில்லவன் ராமன் வல்லவனும்கூட. தர்பை என்கிற புல்லை அவன் எறிய, அது அந்தக் காகத்தை ஈரேழு லோகம் துரத்தியடித்து, இறுதியில் அதன் ஒரு கண்ணைப் பறித்தது. இதைத்தான் தவறு, 'செய்தால் உம்மாச்சி சாமி கண்ணைக் குத்தும்,' என்கிறோம். இந்தக் காலத்தில் PULL-ம் இருந்து கூடவே காக்காய்ப் பிடிக்கத் தெரிந்தவனே வல்லவன்.

★ யாழினிபர்வதம், சென்னை

***மாதா, பிதா, குரு யார் காலில் விழலாம்?***

மாதா, பிதா, குரு இவர்களைத் தவிர வேறு யார் காலிலும் விழாதீர்கள். உங்களைக் கெஞ்சிக் கேட்கிறேன்.

★ மாதங்கி, பம்பாய்

***கிரேஸி நீங்கள் முதன்முதலில் எழுதிய ஜோக் எது...?***

கல்லூரி நாட்களில் 'மாணவரிஸம்' என்ற பத்திரிகையை என் நண்பன் கே.ரவியும், அவர் மனைவி செய்தி அறிவிப்பாளர் ஷோபனா ரவியும் வெற்றிகரமாக நடத்தி வந்தார்கள். அதில்தான் என் முதல் ஜோக் வந்தது. அது...

**ஆசிரியர்:** ராமு கம்ப ராமாயணத்தை எழுதியது யார்?

**ராமு:** தெரியாது சார்...

**ஆசிரியர்:** முட்டாள், கேள்வியிலேயே பதில் இருக்கிறது. கம்ப ராமாயணத்தை எழுதியது கம்பர். சரி போகட்டும்... மணிமேகலையை எழுதியது யார்..?

**ராமு:** மணி சார்...!

★ சோலையப்பன், சென்னை

***வரப்போகும் கண்ணன் பிறந்த நாளுக்காக (கோகுலாஷ்டமி) ஒரு கவிதை சொல்லுங்களேன்...?***

''வடமா மதுரை மன்னன், வேய்ங்
குழல் ஊதும் கண்ணன்
வடமாய் ராதை மகள் தேர், இடையில்
மேயும் இடையன்
கடைவிழி காதல் கீதை, கிடைத்தால்
கொள்வான் போதை
அடடா இவனுக்கெதற்கு, அப்பம்,
சீடை, முறுக்கு..''

## கிரேஸியைக் கேளுங்கள்





அருண் சரண்யா

"இப்போது நாம் போகப் போவது எங்கே தெரியுமா?" என்றார் ராமநாதன்.

"ஒரு நல்ல ஹோட்டலுக்கு" என்றான் ஜருகண்டி ஆர்வமாக.

"அதெல்லாம் அப்புறம். இன்னும் ஒரு முக்கியமான புண்ணிய தீர்த்தத்தைப் பார்க்கப் போகிறோம். அதன் பெயர் பிரம்ம சரோவர்" என்றார் ராமநாதன்.

"அம்மா நீ ஒரு தீர்க்கதரிசி" என்று தன் ஊர் இருந்த திசையை நோக்கிக் கையை ஆட்டியபடி கூறினான் ஜருகண்டி. பிறகு, "போன மாசம் ஒருநாள்கூட குளிக்கவில்லை. இத்தனைக்கும் சேர்த்து நீ படப்போறே"ன்னு திட்டினாங்க. அதுதான் இன்னைக்கு இப்படி குளம்குளமா குளிக்கும்படி ஆகுது" என்று கூறிய ஜருகண்டி, ராமநாதனின் முகத்தில் தெரிந்த அதிருப்தியைப் பார்த்ததும் சட்டென்று பேச்சை நிறுத்திக்கொண்டான். "சும்மா சொன்னேன். இந்தமாதிரிக் குளங்களில் குளிக்க புண்ணியம் செய்திருக்க வேண்டாமா?" என்றான். ஆனால், உடன் பிறந்த துடுக்குத்தனம் அவனிடமிருந்து அவ்வளவு சீக்கிரம் அகலுவதாக இல்லை. "சன்னிஹித் சரோவரில் குளித்தவுடனேயே என் பாவமெல்லாம் போயிருக்குமே. மறுபடியும் பிரம்ம சரோவரில் குளிக்க வேண்டாம் இல்லையா?" என்றான்.

"இந்த அரைமணி நேரத்திலேயே எவ்வளவு பாவங்களை நம் சிந்தனையில் செய்தோமோ!" என்றார் ராமநாதன்.

"அதுவும் சரிதான். பாவமட்டுமல்ல, அழுக்கும் போகணுமே. வழியிலே சோப்பு வாங்கிடலாம்" என்றான் ஜருகண்டி.

"ஊசு, பிரம்ம சரோவரிலும் சன்னிஹித் தரோவரிலும் சோப்புப் போட்டுக் குளிக்கக் கூடாது; துணி துவைக்கக் கூடாது" என்றார் ராமநாதன்.

"நிறைய ஆலயக் குளங்களிலே இப்படித்தான் அறிவிப்புப் பலகை எழுதி வெச்சுருப்பாங்க. அதையெல்லாம் பின்பற்றுவது நம் வழக்கம் இல்லையே?" என்றான் ஜருகண்டி முணுமுணுப்பாக.

பிரம்ம சரோவர் நெருங்கியது. அதன் பிரம்மாண்டம் கண்களை நிறைத்தது. பாரதப் போரின் இறுதிநாட்களில், போரின் உக்கிரத்திலிருந்து தப்ப துரியோதனன் இந்த நீர்நிலைக்குள்ளேதான் பதுங்கி இருந்ததாகக் கூறுகிறார்கள்.

பிரம்ம சரோவரைச் சுற்றி உள்ள தீவுப் பகுதி ஒன்றில்தான், படைப்புக் கடவுள் பிரம்மன் உலக நன்மைக்காகப் பெரும் யாகங்கள் புரிந்தாராம்.

பாரதத்திலுள்ள மிகப்பெரிய ஏரிகளில் ஒன்று பிரம்ம சரோவர். குருக்ஷேத்ர சரோவர் என்றும், பராஸர் என்றும் இதை அழைக்கிறார்கள். இது ஒரு பழமையான ஏரி. ஆனால், மிக நவீனமாக உருவாக்கப்பட்டுள்ளது.

"இதன் நீளம் 3600 அடி. அகலம் 1500 அடி. இதில் 12 அடி ஆழத்துக்கு தண்ணீர் இருந்துகொண்டேயிருக்கும்" என்று புள்ளிவிவரங்களை அள்ளித் தெளித்தார் ராமநாதன்.

பிரம்ம சரோவருக்குப் பக்ரா அணைக்கட்டிலிருந்து தண்ணீர் வரத்துக்கு வசதி செய்யப்பட்டுள்ளது.

பிரம்ம சரோவரின் கரையிலிருந்து பார்த்தால், உள்ளடங்கிக் காணப்பட்ட ஒரு பகுதியைச் சுட்டிக் காட்டினார் ராமநாதன்.

"அந்த நிலப்பரப்பை புருஷோத்தமபுரா என்று கூறுகிறார்கள். முன்காலத்தில் இந்த இடத்தில் ஒரு கோவில் இருந்தது. முகலாய சக்ரவர்த்தி ஔரங்கசீப் இதை இடித்துத் தள்ளிவிட்டு, ஒரு கோட்டையைக் கட்டினார். முஸ்லிம் அதிகாரிகள் குருக்ஷேத்ரத்துக்கு வரும் பயணிகளிடம் வரி வசூலித்தனர். இதெல்லாம் 'இம்பீரியல் கஜடியர் ஆஃப் இந்தியா' என்ற அதிகார

# துரியோதனனின்




பூர்வமான நூலில் பதிவு செய்யப்பட்டிருக்கிறது'' என்றார் ராமநாதன்.

''இடித்துத் தள்ளியதாகச் சொல்கிறீர்களே! இப்போதும் அங்கே ஒரு கோயில் இருக்கிறதே'' என்று கேட்டான் ஜருகண்டி.

''அது சர்வேஸ்வர் மஹாதேவ் கோயில்; புதிதாகக் கட்டப்பட்டது. அதாவது, முகலாய சாம்ராஜ்யத்தில் பதினேழாம் நூற்றாண்டில் பாபா மஹந்த் சிரவண்நாத் என்பவரால் கட்டப்பட்டது. இப்போது அது ஸ்ரீபஞ்சாயதி அகார மஹாநிர்வாணி என்பவரால் நிர்வகிக்கப்படுகிறது'' என்றார்.

பின் ''சூரியகிரகண அமாவாசை அன்று சன்னிஹித் சரோவரில் மட்டுமல்ல, இங்கும் பெருங்கூட்டம் அலைமோதும். ஒரே நேரத்தில் லட்சக்கணக்கானவர்கள் பிரம்ம சரோவரில் ஸ்நானம் செய்ய முடியும். நவம்பர் கடைசியிலோ டிசம்பர் முதல் வாரத்திலோ இங்கு கீதா ஜெயந்தி நடைபெறுகிறது.

# புகலிடம்!

அந்தக் கண்கொள்ளாக் காட்சியை...'' என்ற படி கண்களை மூடிக்கொண்டார். அவர் முகத்தில் பொங்கிய பரவசமே அந்தக் காட்சியை, அவர் தன் அகக் கண்களில் கண்டு களிப்பதை உணர்த்தியது.

''கொஞ்சம் பொதுநலத்துடன் எங்களுக்கும் அந்தக் காட்சியை விளக்குங்களேன்'' என்று பொறுமை இழந்து சற்று உரத்துக் குரல் கொடுத்தான் ஜருகண்டி.

கண்களை மெல்லத் திறந்த ராமநாதன், ''அப்போது இந்த ஏரியிலே தீபங்களை விடுவார்கள். இரவு வேளையில் ஒரே நேரத்தில் ஆயிரக் கணக்கான தீபங்கள் இந்த ஏரியில் மிதக்கும். இந்தக் காட்சிகளையெல்லாம் என்னால் வார்த்தைகளில் விளக்க முடியாது'' என்றார்.

அந்த அழகான, புனிதம் வாய்ந்த ஏரியைக் கண்களால் பார்த்தபடி, அதில் எண்ணற்ற தீபங்கள் மிதப்பதை எண்ணிப் பார்த்தபோது, அந்த அற்புதமான காட்சியை ஓரளவுக்கு உணர முடிந்தது.



**மகாத்மா காந்தியின் அஸ்தியில் ஒரு பகுதி பிரம்ம சரோவரில்தான் கரைக்கப்பட்டது!**

அப்போது விரித்த சடையும் சுருள் சுருளாகத் தொங்கிய தாடியுமாக ஒரு பண்டா கையில் டால்டா டின்னோடு படிகளில் இறங்கினார். அவர் தோளின்மீது அழுக்குப் படர்ந்த ஒரு துணி. அவர் துணியை சுத்தம் செய்யப் போகிறார் என்பது புரிந்தது. ராமநாதனை ஜருகண்டி பார்த்த பார்வையில் பரிகாசம் புலப்பட்டது. ''இப்ப என்ன சொல்றீங்க?'' என்ற பார்வை.

அந்தப் பண்டா டால்டா டின்னில் தண்ணீரைச் சேகரித்துக்கொண்டு மீண்டும் படிகளில் ஏறினார். அங்கு காணப்பட்ட ஒரு கல்லின் மீது அந்தத் துணியை வைத்துத் துவைத்தார். ஒரு டால்டா டின் தண்ணீர் போதுமா? மீண்டும் இருமுறை படிகளில் (சுமார் மூன்று டஜன் படிகள்) இறங்கி ஏறி, சேகரித்த நீரைக் கொண்டு தான் அவரால் அந்த ஒரு துணியையே துவைக்க முடிந்தது.

ஜருகண்டி அசடுவழியத் தலையைக் குனிந்துகொண்டான். ''என் முகத்திலே கரியைப் பூசிட்டாரு... இந்தச் சாமியார்'' என்றான்.

பிரம்ம சரோவரில் ஸ்நானம் செய்துவிட்டு, மகாதேவரைத் தரிசித்துவிட்டுக் கிளம்பினோம்.

''இன்னொரு மிக முக்கியமான இடம் குருக்ஷேத்ரத்தில் உண்டே. அதற்குத்தானே அடுத்ததாகப் போகிறோம்?'' என்று ராமநாதனைக் கேட்டேன். என் மனதில், சோர்ந்துபோன அர்ஜுனன் உற்சாகத்துடன் எழுந்த காட்சி நிழலாடியது. உலகின் தலைசிறந்த உபதேசங்களுள் ஒன்றின் சில வரிகள் வந்துபோயின.

''இந்த பிரம்ம சரோவரின் கரைக்கு அருகிலேயே பார்க்கவேண்டிய வேறு சில இடங்கள் உள்ளன. அதற்கு அப்புறம் சுயாசுரனால் பிரபலமடைந்த இடத்துக்குப் போக வேண்டும். பிறகு நீங்கள் குறிப்பிடும் தலம்தான்'' என்றார் ராமநாதன்.

அங்கிருந்து கிளம்புகையில் ''மகாத்மா காந்தியின் அஸ்தியில் ஒரு பகுதி பிரம்ம சரோவரில்தான் கரைக்கப்பட்டது'' என்று ராமநாதன் கூறியபோது, மேலும் புனிதத்தைக் கூட்டிக்கொண்ட பிரம்ம சரோவரை நோக்கிக் கைகள் தானாக குவிந்தன.

(பயணிக்கலாம்)

## உள்ளும் புறமும்

'வந்தே மாதரம்', 'தாயின் மணிக் கொடி', 'ஆடுவோமே பள்ளு பாடு வோமே'... என்றெல்லாம் பாடித் தீர்த்து விட்டு, அடுத்த வேலையைப் பார்க்கக் கிளம்பிவிட்டோம். சுதந்தரம் கிடைத்து அறுபது ஆண்டுகளும் பூர்த்தியாகிவிட் டன. நாம் என்னென்ன செய்திருக்கிறோம், என்னென்ன செய்ய வேண்டும் என்பது பற்றி விரிவாக, ஆழமாக எல்லோரும் விவாதித்து முடித்துவிட்டார்கள். நாம்



# பாய்ந்து வரும்

மட்டுமல்ல, உலகமே.

நான்கு கால் பாய்ச்சலில் முன்னேறிக் கொண்டிருக்கும் நாடு. ஐ.டி.யில் பெரிய ஆள். கூடியவிரைவில் வல்லரசு. இந்தியா வின் எதாவதொரு மூலையில் பிராஞ்ச் ஆபிஸ் ஒன்றை திறந்துவிட முடியுமா என்று ஒவ்வொரு நாடும் ஏங்கிக்கொண் டிருக்கிறது.

நல்லது. பாகிஸ்தான்? ம்ஹூம் தேறாது. ஏன்? ராணுவ ஆட்சி, மதவாத அரசியல், மசூதி தகர்ப்பு, தீவிரவாதம். பெண்கள் கணுக்கால் தெரிய ஆடை அணிய முடி யாது. அந்நியர்களின் கண்களோடு கண்கள் பொருத்திப் பேசத் தடை. மதரஸாக்களில் துப்பாக்கியோடு முகமூடி ஆள்கள் ஒளிந்து கிடக்கிறார்கள். கற்றவர்கள் எண்ணிக்கை மிகவும் குறைவு. அப்படியே படித்தாலும் இஸ்லாமிய மதக்கல்வியை மட்டுமே கற்றுக் கொள்கிறார்கள்.

தவிரவும், எப்போது பார்த்தாலும், இந்தியாவைப் பற்றித்தான் அவர்கள் சிந் தித்துக் கொண்டிருக்கிறார்கள். பாகிஸ் தானிய உளவு ஸ்தாபனமான ஐ.எஸ்.ஐ. இந்தியாவின் மூலைமுடுக்குகளில் எல் லாம் பரவி, 'டென் டு ஃபைவ்' ரெகுலராக உளவுபார்த்துக் கொண்டிருக்கிறது. இந்தி யாவை எப்படிக் கவிழ்க்கலாம் என்பது தான் பாகிஸ்தானிய அரசியல்வாதிகளின் ஒரே கவலை.

பத்திரிகை சுதந்தரம் இல்லை. எந்நேர மும் எமர்ஜென்ஸி வரலாம். எப்போது வேண்டுமானாலும் எங்கே வேண்டுமானா லும் குண்டு வெடிக்கலாம். அடிப்படை சுதந்தரம் கிடையாது.

இந்தக் குற்றச்சாட்டுகளை உள்வாங்கிக் கொண்டு, முதல்முறையாக பாகிஸ்தானுக் குள் காலடி எடுத்து வைப்பவர்கள் சர்வ நிச்சயமாக அதிர்ந்துதான் போவார்கள். பாகிஸ்தானைப் பற்றி அவர்களுக்குள் உருவாகியிருக்கும். அத்தனை பிம்பங் களும் சுக்குசுக்கலாகச் சிதறிவிடும்.

அட, பாகிஸ்தானா இது? குடிசை வீடுகள் இல்லை. பாதைகளில் குப்பைக் கூளங்கள் இல்லை. அம்மா தாயே முனகல்கள் அதிகம் இல்லை. விமான நிலையங்கள், பேருந்து நிலையங்கள், ரயில் நிலையங்கள் எல்லாமே சிரத்தையுடன் இயங்கிக் கொண் டிருக்கின்றன. நேரத்துக்கு வண்டிகள் வந்துசென்று கொண்டிருக்கின்றன. முக் கியச் சாலைகளில் மேம்பாலங்கள். இப் போதுதான் அமெரிக்கப் ஃபேக்டரியி லிருந்து தயாராகி வந்தேன் என்று பீற்றிக்கொண்டபடி பறக்கும் பளபள சொகுசுக் கார்கள்.



# பாகிஸ்தான்!

முனுக்கென்றால் மின்சாரத்தை துண்டிக்கும் வழக்கம் கிடையாது. அமைச்சர் வருகிறார், ஆட்டுக்குட்டி வருகிறது என்று சொல்லிப் போக்குவரத்தைப் பல மணி நேரங்களுக்கு நிறுத்திவைக்கும் அடாவடித்தனம் கிடையாது. ஒரு நடுத்தர பாகிஸ்தானியரின் வீடு, நம்மூர் மேட்டுக்குடி வீட்டைவிட பெரியது; பிரமாண்டமானது.

ஹா, இதெல்லாம் இருந்து என்ன பிரேயாஜனம், நாட்டின் பொருளாதார வளர்ச்சி முடங்கிக்கிடக்கிறதே! - இப்படியும் குறைபட்டுக்கொள்ளமுடியாது. ஆசியாவிலேயே பொருளாதார ரீதியில் வேகவேகமாக வளர்ந்து வரும் நாடுகளின் வரிசையில் இந்தியாவோடு கைகோத்துக் கொண்டு பாய்ந்து வருகிறது பாகிஸ்தான்.

உலகின் எந்த மூலையில் எந்த ஒரு நவீன சாதனம் உற்பத்தியானாலும், ஒரு காப்பி இங்கே வந்துவிடுகிறது. 2003-இல் மூன்று மில்லியனுக்கும் குறைவானவர்களே மொபைல் பயன்படுத்திக் கொண்டிருந்தார்கள். இன்று, ஐம்பது மில்லியன்.

மியூசிக் வீடியோ, சேனல் வீ, பாப், ராக், கிடார், ஃப்யூஷன் ஜீன்ஸ், டீ ஷர்ட், குளிர் கண்ணாடிகள். ஃபேஷன் டிசைனிங் செய்ய, கம்ப்யூட்டர் புரோக்கிராம் எழுத, அறுவைச் சிகிச்சை செய்ய தேர்ந்த கைகள், செய்திதாள்கள், பத்திரிகைகள், சிற்றிதழ்கள், நல்ல - மோசமான கவிதைப் புத்தகங்கள். - இப்படி எல்லாம் இருக்கின்றன.

இங்கு இருப்பவர்கள் இடித்துச் சொல்வது போல், மத புராணம் பாடிக்கொண்டு, மசூதிகளில் அடைந்துகிடப்பவர்கள் அல்லர் அவர்கள். ஸ்டாக் மார்க்கெட் பற்றியும், வால் ஸ்ட்ரீட் ஜர்னல் பற்றியும் நியூ யார்க் டைம்ஸ் பற்றியும் தஸ்லிமா நஸ்ரீன் பற்றியும் 123 பற்றியும் ஆரோக்கியமாக விவாதித்துக் கொண்டிருக்கிறார்கள்.



நம்மூர் அரசியல்வாதிகள் போலத்தான் அவர்களூர் அரசியல்வாதிகளும் ஊழல், அடாவடித்தனம், லஞ்சம், 'தலைவர் அழைக்கிறார் திரைகடல் என திரண்டு வாரீர்' போஸ்டர், எல்லாமே எல்லாமே நம்மைப்போலவே.

சில வித்தியாசங்கள். நம் பிரதமர் ராணுவச் சீருடை அணிவதில்லை. அங்கே, அவர் அணிகிறார். நாம் அவர்களை அவ்வப்போது குறைத்து மதிப்பிடுகிறோம். அவர்கள் அப்படிச் செய்வதில்லை என்பதை முழுமையாக உணர்வார்கள் பாகிஸ்தான் செல்பவர்கள்!

**மருதன்**



* தனகோபாலன்

# சரிவைத் தராத சம்பங்கி!

''கடந்த பத்து வருசமா சம்பங்கி போட்டு வர்றோம். முதல் ஆறு வருசம் நாட்டுச் சம்பங்கி போட்டிருந்தோம். அப்பல்லாம் லாபம் சுமாராத்தான் வந்திச்சு. எங்க அப்பா விவசாயத்துல தீவிர ஆர்வம் உள்ளவரு. அதனால பல ஊரு சுத்திப் பார்த்து, கடைசியா பெங்களூருல இந்த 'ப்ரஜ்வல்' என்கிற நிலச்சம்பங்கி விதைக் கிழங்குகளை வாங்கி வந்தாரு. இப்ப நாலு வருசமா அதான் போட்டிருக்கோம். இதுல நல்ல லாபம். என்னோட தம்பிய, கடன்படாம இன்ஜினியரிங் காலேஜ்ல சேர்த்துப் படிக்க வைக்க முடியுதுன்னா பார்த்துக்கங்க!'' எனக் கூறும் காயத்ரி (22), அஞ்சல் வழிக்கல்வியில் பி.சி.ஏ. இரண்டாமாண்டு பயில்பவர்.

திருச்சி மாவட்டம், துறையூர் அருகே உள்ள வெங்கடாஜலபுரம் கிராமம். அங்கிருந்து இரண்டு கி.மீ. தூரத்தில் பச்சை மலை அடிவாரத்தில் அமைந்திருக்கிறது. இயற்கை விவசாயி தனகோபாலன் குடும்பத்தாரின் சம்பங்கித் தோட்டம்.

**மா**லைகள் தொடுக்க, மணவறை அலங்கரிக்க மற்றும் வாசனை திரவியம் தயாரிக்க... எனப் பயன்படும் இந்த நிலச்சம்பங்கி, பெங்களூரு தோட்டக்கலை ஆராய்ச்சிப் பண்ணையினர் முயற்சியில் உருவானது.

''ஒரு ஏக்கருக்கு முன்னூறு கிலோ சம்பங்கி விதைக் கிழங்கு தேவை வருடத்தில் சித்திரை - வைகாசி மற்றும் ஐப்பசி - கார்த்திகை மாதங்கள் தவிர, மற்ற மாதங்களில் சம்பங்கி விதைக்கிழங்கு நடலாம். அதுக்கு முதல்ல, தோட்டத்தை நல்லா ஆழமா உழ வேண்டும். முதல் உழவுக்குப் பின்னர் ஒரு ஏக்கருக்கு இருபது டிப்பர் மக்கிய தொழு உரம் போடணும். மறு உழவு ஓட்டி தோட்டத்தைச் சமப்படுத்தி, பாத்தி கட்டணும். உயிர் உரங்கள் அடங்கிய தொட்டியில் விதைக்கிழங்குகளை நனைச்சு எடுத்துத் தோட்டத்துல நடணும். நட்ட பின்னாடி செடி முளைக்கும் வரை தண்ணீர் பாய்ச்சக் கூடாது. கோடை காலங்களில் வாரம் ஒரு தடவையும், பனிக் காலங்களில் பதினைந்து நாட்களுக்கு ஒரு முறையும் தண்ணீர் விட்டால் போதும்!'' எனச் சொல்கின்றனர் தோட்டத்தில் பூப் பறித்துக் கொண்டிருந்த சுந்தர்ராஜ் - ராணி தம்பதியினர். சுந்தர்ராஜ், தனகோபாலனின் தம்பி ஆவார்.

**மூ**ன்று ஏக்கர் தோட்டத்தில் சம்பங்கி சாகுபடி செய்துவரும் தனகோபாலன், ''செடி வளரத் துவங்கியதிலிருந்து, அந்தப் பயிர் பயன்பாட்டில் உள்ள காலம் வரைக்கும் இரண்டு மாதங்களுக்கு ஒரு முறை, இயற்கை சார்ந்த நுண்ணுயிர் உரங்கள், நுண்ணியிர்ப் பூச்சி விரட்டிகள் மற்றும் மக்கிய தொழு உரம் அல்லது வேப்பம்புண்ணாக்குடன் கலந்து ஒரு வாரம் வைத்திருந்து, தோட்டத்தில்


* ராணி

> ஒவ்வொரு வருடமும் சராசரியாக ஒரு லட்ச ரூபாய்க்கு மேல் நிகர லாபம் பெற்றுத் தருகிறது

செடிகளுக்கு இட்டு தண்ணீர்ப் பாய்ச்ச வேண்டும். இந்த வழிமுறையை விடாது செயல்படுத்தி வந்தால், சம்பங்கிப் பயிரானது தொடர்ந்து நான்கு வருடங் களுக்கு நல்ல பலனைத் தரும்'' என்கிறார்.

மாதாமாதம் களையெடுத்து தோட்டத் தினை சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும். மற்ற மலர்களைவிட இதற்குப் பூப்பறிக்கும் ஆட்கள் தேவை குறைவு. சம்பங்கியைப் பொறுத்தவரை தெளிப்பு நீர்ப் பாசனம் மிகவும் சிறந்தது. மேலும் தனகோபாலன், இயற்கை விவசாய முறைகளைக் கடைபிடித்து வருவதால், இவரது தோட்டத்துச் சம்பங்கிப் பூக்களை வாடும் தன்மை இரண்டு மூன்று நாட்கள் வரை அண்டுவதில்லை என்பது குறிப் பிடத்தக்கது.

''தமிழகத்திலேயே 'ப்ரஜ்வல்' ரக நிலச்சம்பங்கி எங்கள் தோட்டத்தில் மட்டுமே பயிராகிறது. விதைக் கிழங்கு நட்ட ஆறு மாதத்திலிருந்து சம்பங்கி பூ பறிக்கலாம். தொடர்ந்து நல்ல முறையில் தோட்டத்தைப் பராமரித்து வந்தால், நான்கு வருடங்கள் தொடர்ந்து தினசரி பூ பறித்துச் சந்தைக்கு அனுப்பி வைக்கலாம். நான்கு வருடங்களில் ஒரு ஏக்கருக்கு ஒவ்வொரு வருடமும் சராசரி ஒரு லட்ச ரூபாய்க்கு மேல் நிகரலாபம் பெற்றுத் தருகிறது. இந்த நிலச் சம்பங்கி, கடைசி நான்காவது வருட இறுதியில் அறு வடையின்போது, இதன் கிழங்குகளை விதைக் கிழங்குகளாகத் தயார் செய்வதன் வாயிலாக, சம்பங்கி விவசாயிக்குக் கூடுதல் போனஸ் (இதிலும் வருவாய் உள்ளது) கிடைத்திட வாய்ப்பு உள்ளது!'' எனச் சொல்கிறர் சம்பங்கி விவசாயி தனகோபாலன்.

**- ஸ்ரீஅரசு**


* காயத்ரி




● ஷேன் வார்னே இங்கிலாந்தில் குடியேறப் போகிறார் என்றொரு திரியை சென்ற வாரம் யாரோ கிளப்பிவிட்டுப் போக, ஆஸ்திரேலிய பிரதமர் வரைக்கும் தகவலறிந்து சிண்டைப் பிய்த்துக்கொண்டிருக்கிறார்கள். இந்த நாள்வரை கவுண்டி அணியில் இரு அயல் நாட்டு வீரர்கள் ஆடலாம் என்பது விதி. அடுத்த வருடம் முதல் ஒருவருக்கு மட்டுமே அனுமதி வழங்கப்படுகிறது. இதை முன்னிட்டு வார்னே இங்கிலாந்தில் குடியேறப் போகிறார் என்பது நிமிடத்துக்கு நிமிடம் ப்ளாஷ் நியூஸ். வசதி வாய்ப்புக்காக ஏராளமான விளையாட்டு வீரர்கள் அமெரிக்கக் குடியுரிமை பெற்றதுபோல ஷேன் வார்னேவும் நாடு விட்டு நாடு தாவுவாரா என்பது விரைவில் தெரிந்துவிடும்.

● இங்கிலாந்து விக்கெட் கீப்பர் பிரியருக்காகத் தாராளமாக ஒரு சொட்டுக் கண்ணீர் விடலாம். டெஸ்ட் தொடரில் டெண்டுல்கர், லக்ஷ்மண் கேட்சுகளைச் சிதறவிட்ட பிறகு விமர்சனங்கள், அபிப்ராயங்கள் என்கிற பேரில் போகிறவர் வருகிறவர் எல்லாம் தினமும் அவருக்குத் தர்மஅடி கொடுக்கிறார்கள். 'எனக்கு ரொம்ப கஷ்டமா இருக்கு' என்று அவரும் வெளிப்படையாகப் பேசிப் பார்த்துவிட்டார். ம்ஹூம், கிஞ்சித்தும் அவர்மீது யாருக்கும் பரிதாப உணர்ச்சி ஏற்படவில்லை. விமர்சனங்கள் குறித்து இயன் சேப்பல் ஒருமுறை இவ்வாறு சொன்னார்: ''ஒரு கிரிக்கெட்டர் நன்றாகச் சோபித்தால் அடுத்த நாள் ஒரு செய்தித்தாள் விடாமல் படித்துவிட வேண்டும். சோபிக்கா விட்டால் செய்தித்தாள் வாங்குவது கூட தவறு.''

● இந்தியா - பாகிஸ்தான், காதலர்கள், காந்தி கருத்துகள் போன்ற சப்ஜெட்டுகள் பாலிவுட்டில் நீர்த்துப்போய்விட்டன. விளையாட்டை மையமாகக் கொண்ட கதைகளுக்குத்தான் அங்கு கடும்கிராக்கி. பெண்கள் ஹாக்கி தொடர்பான ஷாருக்கான் படமான 'சக் தே இந்தியா'வுக்கு உலகம் முழுக்க ஆச்சர்ய அலைகள். போட்டிக்கு, ஜான் ஆப்ரஹாம் 'கோல்' என்கிற, கால்பந்து தொடர்பான படமொன்றில் நடித்துக் கொண்டிருக்கிறார். தமிழ் சினிமாவில் மட்டும் விளையாட்டு என்பது வினோதமாகப் பார்க்கப்படுகிறது; வியக்கப்படுகிறது; அதேசமயம் புறக்கணிக்கவும்படுகிறது. 'கில்லி'யில் கபடி ஊறுகாயாகப் பயன்படுத்தப்பட்டது. அதுவும் முழுக்க தவறான விதிமுறைகளில் விஜய் கபடி ஆடினார். ராஜு சுந்தரம் நடித்த 'ஐ லவ் யூ டா'வில் கிரிக்கெட்டை கொத்துப் பரோட்டா பண்ணினார்கள். 'சென்னை 600 028' மட்டும் ஆறுதல் படம். வித்தியாசமான கதைகளுக்கு ஏங்கும் கமல், விக்ரம் போன்ற நடிகர்கள், ஏன் விளையாட்டு தொடர்பான கதைகளில் தலை வைத்துக்கூட படுப்பதில்லை? கோச்சுகளிடமும் விளையாட்டு வீரர்களிடமும் கேட்டால், ஆயிரம் கண்ணீர்க் கதைகள் சொல்வார்களே.

● காந்தத் துண்டு போல ரஞ்சி வீரர்களை



களை ஏற்படுத்திய ஐந்து நடுவர்களை 20-20 உலகக்கோப்பை பக்கமே வராதீர்கள் என்று ஐ.சி.சி. சமீபத்தில்தான் கண்டிப்புக் காட்டியிருந்தது. அதற்குள் மீண்டும் குளறுபடிகள்.

● வழக்கமாக அம்பயர்களின் தொழிலில் உள்ள சங்கடங்களை அறிந்து அவர்கள் மீது பூப்பந்துகள் எறியும் விமர்சகர்கள்கூட இம்முறை

# சபாஷ், சரியான போட்டி!

ஈர்த்திருக்கிறது ஐ.சி.எல். இன்று வரை நாற்பத்தெட்டு இந்திய வீரர்கள் ஐ.சி.எல். பக்கம் சாய்ந்துள்ளனர். வருடத்துக்கு தலா இருபது லட்சம் சம்பளம், மூன்று வருட ஒப்பந்தம் என்கிற இன்ப போதையில் எல்லோரும் தலையாட்டியிருக்கின்றனர். நான் இறுதிநாள் வரை உங்களுக்குத் துணையாக இருப்பேன் என்று உருக்கமாக அனைவருக்கும் நன்றி செலுத்தியிருக்கிறார் கபில் தேவ். கூடவே, பி.பி.சி.ஐயின் கொள்கைகளுக்கு நாங்கள் மாறுபட்டவர்களே தவிர வேறுபட்டவர்கள் அல்ல என்று வேறு சொல்கிறார் அவர். சபாஷ் சரியான போட்டி!

● இங்கிலாந்து தொடரின்போது சுற்றும் முற்றும் பார்த்துத் திக்பிரமை அடைந்துதான் பல வீரர்கள் பெவிலியனுக்குத் திரும்பினார்கள். தொடரில் பங்கேற்ற மூன்று அம்பயர்களும் அவர்தம் பங்குக்குக் குறைந்தது மூன்று அழுகுணித் தீர்ப்புகளையாவது தந்தபிறகே தொடரை நிறைவு செய்தார்கள். (கங்கூலிக்கு மூன்று முறை அநியாய தீர்ப்புகள்.) உலகக் கோப்பை ஃபைனலில் பணியாற்றி இறுதியில் குழப்பங்

பாணங்கள்தான் எறிகிறார்கள். நவீனப் பார்வையும் அணுகுமுறையும் கிரிக்கெட்டில் காலூன்றத் தொடங்கி விட்டன. இதைச் சீர் குலைக்கும் நடுவர்களின் குற்றம்குறைகளை முழுவதுமாகச் செப்பனிட வேண்டும் என்று உரக்கக் கோரிக்கை வைக்கிறார்கள். கடமையுணர்வு, நேர்மை, கட்டுப்பாடு போன்றவற்றில் வீரர்கள் தடுமாறலாம். ஆனால், நடுவர் பொறுப்பில் உள்ளவர்கள் கலகலத்துப் போனால், கிரிக்கெட்டும் சரிந்துபோகும்; நிம்மதியும் குலைந்து போகும்.

●



**ச.ந.கண்ணன்**




# என்றென்றும் எங்களோடு!

**ஹலோ வாசகர்களே! இதோ இந்த வார தித்திக்கும் குவியல்கள்.**

பள்ளிப்பட்டி கே.ஆனந்தன் சொல்றார்:

பத்து வருஷமா கல்கியைப் படிக்கிறேன். நான் ஒரு நகைச்சுவை எழுத்தாளன். ஆனா, கல்கியில முதல்ல படிக்கறது சீரியஸான தலையங்கம்தான். முன்னே மூன்று பக்கங்களா போட்டுட்டு இருந்தீங்க. அதுல எடுத்துக்கற பிரச்னையை விரிவா அலசுவீங்க. இப்ப ரெண்டு பக்கமா மாத்திட்டதால விஷயத்தைச் சுருக்கமா கொடுக்கறதா தோணுது. மறுபடியும் மூணு பக்கமா பண்ணலாம். பக்கங்களை அதிகமாக்குங்க. டைட்டானியம் பத்தின கவர்ஸ்டோரி பல விஷயங்களைத் தெளிவாக்கிச்சு.

தாராபுரம் தீபா காசி விஸ்வநாதன் பேசறார்:

மறைந்த இசை விமர்சகர் சுப்புடு என்னோட பெரிய மாமனார். டிசம்பர் சீஸனில் எங்கள் வீட்டுக்கு வருவார். கல்கிக்காக இசைவிமர்சனங்களை அவர் சொல்லசொல்ல... நான் எழுதியிருக்கேன். கல்கி பத்திரிகை மேலே






எனக்கு எப்பவுமே தனி ஈடு பாடு. பெண்களுக்கான சுய தொழில் குறித்து ஒரு பகுதியை வெளி யிடுங்க. அதேபோல குழந்தைகள் நலன் பற்றியும் ஓரிரு பக்கங்கள் எதிர்பார்க்க றோம். உலக சினிமாக்கள், அதன் இயக்கு நர்கள் தொழில்நுட்ப கலைஞர்கள் பற்றிக் கொடுக்கலாம்.

விசலூர் ஜி.ஜி.கிருஷ்ணன் சொன்னது: நான் பள்ளியில் படிக்கறப்ப 'கோகுலம்'



விரும்பிப் படிப்பேன். அந்த ஆர்வம்தான் இன்று கல்கி உட்பட பல பத்திரிகைகளை படிக்க காரணம். இந்த வாரம் டைட்டானி யம் பத்தி நேரடியா போய்ப் பார்த்து கட்டு ரைச் செய்திருக்கீங்க. நிறைய விஷயங் களைத் தெரிஞ்சுக்க முடிஞ்சது. சில வருஷத்துக்கு முன்னாடி 'நகரச் சிறப் பிதழ்'னு பண்ணிட்டிருந்தீங்க. அந்த மாதிரி மறுபடியும் ஒரு பகுதியை ஆரம் பிங்க. பதினஞ்சு வருஷமா கல்கியைப் பார்த்துட்டு இருக்கேன். காலத்துக்கேற்ற நல்ல மாற்றங்களுடன் வருது. இன்னும் எத்தனை வருஷங்களானாலும் கல்கி என்றென்றும் எங்களோடு இருக்கும்.

விழுப்புரம் ராஜலட்சுமி பேசியது: அமரர் கல்கியின் அத்தனை நாவல் களும் எங்கள் வீட்டு நூலகத்தில் இருக்கு. இப்ப கல்கியில வர்ற 'பார்த்திபன் கனவு' தொடரை மறுபடியும் படிக்க ஆரம்பிச்சுட்டேன். ஓவியங்களும் சிறப்பா இருக்கு. அடுத்து நான் படிக்கறது 'வாரம் ஒரு பாசுரம்' கிரேஸியைக் கேளுங் கள். மூன்றாவது தலைமுறையா கல்கி யைப் படிக்கறோம். இன்னும் பல தலை முறைகளுக்குக் கல்கி எங்கள் சொத்தாகத் தொடரும்.

இந்த வார தித்திக்கும் திங்களை முடிக்கிறார் திருநெல்வேலி வீ.முத்தையா:

'சீக்ரெட் ஆப் சிறுநீரகம்' தொடர் ஒரு மருத்துவ கட்டுரையைப் படிக்கிற மாதிரியே இல்லீங்க. டாக்டர் ரவிச்சந்திரன் சுவாரஸ்யமா ஒரு கதையைச் சொல்ற மாதிரி எடுத்துட்டுப் போறார். அதனால சுலபமா பதியுது. 'சி.ஐ.டி. விஷ்வா' படத் தொடர் விறுவிறுப்பா இருக்கு. ஆன்மிக ரீதியா தன்னம்பிக்கையூட்டும் தொடரை வெளியிடுங்க. கல்கியில அழகுணர்ச்சி இருக்கு. ஆபாசம் இல்லை. மற்ற பத்திரி கைகளோடு போட்டியிட வேண்டிய அவசியம் கல்கிக்குத் தேவையில்லை. ஏன்னா கல்கிக்காக எப்பவும் ஒரு கூட்டம் இருக்கு!



தங்கச்சிக்காக தலையையே எடுக்கத் துணியற அண்ணன். தலையே போனாலும் அந்தத் தங்கச்சியை விரும்பாத நாயகன். அண்ணன் - காதலனுக்கு நடுவுல அல்லாடுற நாயகின்னு அதிரடி காதல் - மோதலை விறுவிறுப்பா தந்திருக்காரு டைரக்டர் பாலசேகரன்.

காதலை உள்ளுக்குள்ளேயும் கோபத்தை வெளிப்படையாவும் நேர்த்தியா காண்பிச்சு கலங்கடிக்கிறார் மாதவன். எதையும் விடாப்பிடியா நின்னு சாதிக்கும்போது கனல் கண்ணைக் கட்டுது. அவரையே கடுப்பேத்துது. ஸ்நேக் பாபுவா வந்து சிரிப்புக்கு உத்தரவாதம் தர்ற வடிவேலு. இன்னும் எவ்ளோ நாளைக்குத் தான் அடிவாங்கி அழப்போறார்? ரூட்டை மாத்துங்கப்பு! மாதவன் தம்பியா புதுமுகம் 'ஃபேர் அண்ட் லவ்லி' ப்ரவீன் - நாட்பேட்.

மணிசர்மா இசையில 'பயாலஜி' பாட்டுக்கு பலே போடலாம். மீதிப் பாடல்களுக்கு எழுந்து கேண்டீன் போகலாம்.

# ஆரியா




## விமர்சனம்

தூக்கிச் சாப்பிடுது ஒரு செல்லம். யார்னு சொல்லணுமா என்ன? செல்லத்தோட ஆக்டிங் அட்டகாசங்கள் ஆர்யால ஆகாயம் தொடுது. அதையும் தாண்டி ஏதாச்சும் உயரம் இருந்தா அதைக் கூட நிச்சயம் தொட்டுடுவாருன்னுதான் தோணுது. பாவனாவும் பதவிசா ஒண்ணும் வரல. தாதாவோட தங்கையா வந்து தடுமாற்றமில்லாம நடிச்சிருக்காங்க. அவங்க தெற்றுப்பல் சிரிப்பு கொள்ளை அழகு. மிரட்டும்போது மிரள வைக்கிறாங்க. அதட்டும்போது அலற வைக்கிறாங்க. ஆனா சமயத்துல அதுவே ஓவர் டோஸாகி பின்னணில இன்னும் முறுக்கு வேணும். கே.வி.குகனோட ஒளிப்பதிவு படத்துக்கு ப்ளஸ். அழகையும் ஆர்பாட்டத்தையும் ஒரு சேர அள்ளித் தெளிச்சிருக்காரு.

பதற்றமில்லாம கதை சொன்ன பாலசேகரன், திரைக்கதை வேகத்தை இன்னும் கொஞ்சம் கூட்டி, பாவனா - பிரகாஷ்ராஜ் அடாவடித்தனங்களை இன்னும் கொஞ்சம் குறைச்சு, க்ளைமாக்ஸை இன்னும் கொஞ்சம் மெருகூட்டியிருந்தா ஆர்யாவை அடிச்சுக்க ஆள் இருந்திருக்காது.

— மனஸ்வினி

---

# கழகண்டு செய்யும் பிரான்! 46

## வாரம் ஒரு பாசுரம்

**சுஜாதா**



பெரியாழ்வார் பாசுரங்களில் உள்ள அருகாமை, அன்யோன்யம் மற்ற ஆழ்வார்களைவிட அதிகம். திருமாலை கண்ணன் ரூபத்தில் குழந்தையாகப் பார்த்துத் தன்னைத் தாயாக்கிக் கொண்டு, அக் குழந்தையை பல விதங்களில் கொஞ்சும் பாடல்களில் தமிழ் கொஞ்சும். இந்தப் பாட்டில் கண்ணன் செய்யும் விஷமங்களை விவரிக்கிறார்.

''எண்ணெய்க் குடத்தை உருட்டி
இளம் பிள்ளை கிள்ளி எழுப்பி
கண்ணைப் புரட்டி விழித்துக்
கழகண்டு செய்யும் பிரானே!
உண்ணக் கனிகள் தருவன
ஒலிகடல் ஓதநீர் போலே
வண்ணம் அழகிய நம்பி!
மஞ்சனம் ஆட நீ வாராய்.''

கழகண்டு என்றால் விஷமம்; நீம்பு. ஓதம் என்றால் அலை.

எண்ணெய்க் குடத்தை உருட்டி, தூங்கும் குழந்தைகளைக் கிள்ளி எழுப்பி, கண்ணை ஒரு மாதிரி புரட்டி விழித்துப் பயமுறுத்தி, விஷமங்கள் செய்யும் பிரானே! உனக்குப் பழங்கள் தருவேன். கடல் நிறத்தவனே! உன்னைக் குளிப்பாட்ட வேண்டும். வர மாட்டாயா?

கண்ணனை நீராட அழைக்கும் இப்பாடல்கள் பெரியாழ்வாரின் பிள்ளைத் தமிழின் ஒரு பகுதியாகும். பிள்ளைத் தமிழுக்கு இலக்கணமாக அமைந்தவை. இன்று உலகில் நிகழும் பல விஷயங்கள் பகவானின் 'கழகண்டு' போலத் தான் தோன்றுகிறது.

> **பெரியாழ்வாரின் பாடல் பிள்ளைத் தமிழின் ஒரு பகுதியாகும்**

ராக்கெட் வேக விற்பனையில்...

# அறிவியல் சிறப்பிதழ்!

திகைப்புக்கு...

## ஏலியன்ஸ் நிஜமா?







வியப்புக்கு...

## ரோ...ரோ...ரோ... ரோபோ!

பரிசுப் போட்டி, உறுப்பினர் புகைப்படங்கள்.... பல சுவையான செய்திகள்!

# கோகுலம்

செப்டெம்பர் 2007 விலை ரூ.8/-

குழந்தைகளின் குதூகலம்!

# மேஜிக்



"யாரங்கே...?"

"ஏன், நான்தான் எதிரி மன்னன்!"

"என்னை மன்னிச்சுடுங்க, பழைய ஞாபகத்துல கேட்டுத் தொலைச்சுட்டேன்!"

■ அ.கலைஹரல் ரஹ்மான்

"யோவ், எங்க வீட்டுக்கு வந்து திருடாமப் போறியே ஏன்?"

"வாஸ்துப்படி பீரோ குபேர மூலையில இல்ல!"

■ கா.சங்கர்





■ சீர்காழி வி.ரேவதி

"நாம செத்தா ஊரே வருத்தப்படுறது மாதிரி நடந்துக்கணும்."

"அதுக்காகத்தான் ஊர்ப் பூரா கடன் வாங்கி வெச்சிருக்கியாக்கும்...?"

"நமக்கு மேலே
ஒரு சக்தி இருக்கிறத
நீ ஒத்துக்கிறியா?"

"தாராளமா ஒத்துக்கிறேன்.
என் பொண்டாட்டி
மாடியிலதான் இருக்கா!"

■ வ.ராஜாஜி



# மாப்பிள்ளை!



"மேஜிக் பேர்வழியைக் காதலிச்சது
தப்பாப் போச்சு!"

"ஏன்?"

"கல்யாணம்னு சொல்லி மணமேடை
வரை கூட்டிப் போய் கடைசியில
**மாப்பிள்ளையை** மாத்திட்டாரு!"

■ அம்பை தேவா

"ஏண்டா, வாங்குன பணத்தைத்
திருப்பித் தர இப்படி
யோசிக்கிறே?"

"இப்படித்தானே
நான் **பணம்**
கேட்டப்ப நீ யோசிச்சே!"



■ ஆர்.சுந்தர்ராஜன்

# தெவிட்டாத ராமன் கதை!






திருப்பூர் கிருஷ்ணன்

**கோ**வி ராமாயணம் என்ற இக் காவிய நூல் மூன்று பகுதிகளாக அமைந்த மாபெரும் படைப்பு. மொத்தம் 3571 பாடல்கள். பெரிதும் அறுசீர் விருத்தங்களும் ஆங்காங்கே எண்சீர் விருத்தங்களுமாக மரபுக் கவிதையின் இனிய எழில்நலம் துலங்கும்படிப் புனையப்பட்ட நூல். படிக்கத் தெவிட்டாத ராமன் கதை. நூலாசிரியரின் இலக்கிய ஆற்றல் மட்டுமின்றி, ஆறு ஆண்டுக்கும் மேலான கடின உழைப்பும் இளம் எழுத்தாளர்கள் கவனத்துக்குரியது.

அயோத்யா காண்டம், உத்தம காண்டம், மகுட காண்டம் என மூன்று காண்டங்களுக்கும் தலைப்பின் முதல் எழுத்து அகர உகர மகரம். ஓம்கார வடிவினன் இராமபிரான் என்பதை இவ்விதம் புலப்படுத்துகிறார் நூலாசிரியர்.



■ கோவி.மணிசேகரன்

கம்பருக்குக் காலத்தால் முற்பட்ட திருத்தக்க தேவர், சிந்தாமணியில் தொடுத்த விருத்த ஓசைகள் பல. அவை, பின்வந்த கம்பனில் சுகமாய்ப் படிந்தன. 'சிறடிய கிண்கிணி சிலம் பொடு புலம்ப' எனச் சிந்தா மணியில் வரும் மெல்லோசை, 'பஞ்சியொளிர் விஞ்சுகுளிர் பல்லவ மனுங்க' சூர்ப்பணகையின் நடையாய்க் கம்பனில் கலந்தது. அதே மரபில் கம்பனின் சந்த வளம் இந் நூலில் ஆங்காங்கே இயல்பாய்க் கலந்து அழகைக் கூட்டுகிறது.

'முன்னோர் மொழிபொருளே அன்றி அவர் மொழியும் பொன்னே போல்' போற்றிய திறன் பல இடங்களில் உண்டு. வால்மீகியைப் பற்றி 'ஆயிரம் கவிஞர்கள் இவன்கேழ் ஆவரோ?' என வரும் வரி, 'ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ' என்ற கம்பன் வரிகளின் இனிய தாக்கம்(12-ஆம் பாடல்). சரித்திர நாவலாசிரியர் நூலில் அடிக்குறிப்பு இல்லாமலா? ஆங்காங்கே உள்ள அடிக் குறிப்புகள் நூலுக்கு வளம் சேர்க்கின்றன.

தொண்ணூற்றொன்பது விழுக்காடு எளிதில் புரியும் சொற்களால் அமைந்திருந்தாலும், ஒரே ஒரு விழுக்காட்டைப் புரியக் கடினமான சொற்கள் ஆதிக்கம் செலுத்துகின்றன. முத்து எனப் பொருள் குறித்திருந்தாலும்கூட, தௌதிகம் என்பது போன்ற சொற்களைப் பயன்படுத்தியிருப்பது நூலைக் கடுமை எனக் கருத இடம் தரக்கூடும். (849-ஆம் பாட்டு. பருவரல் என்ற சொல்லின் பொருள் துன்பம் என்பது பழந்தமிழ் கற்றார்க்கன்றிப் பொதுநிலையில் பயில்வாருக்குத் தெரிய வாய்ப்பில்லை. (1982-ஆம் பாடல்)

தசரதன் நாகரிகத்தவன் என்பது நாகரித்தவன் எனத் தவறாக அச்சாகியுள்ள 70-ஆம் பாடல் அடிக்குறிப்பைப் போன்ற மிகச் சில இடங்களைத் தவிர எழுத்துப் பிழை அதிகமில்லை.

கோவி ராமாயணம் - கோவி.மணிசேகரன்,
வெளியீடு: கோவி பிரசுரம், 9 - 115, ஐந்தாவது தெரு,
சாய்நகர், விருகம்பாக்கம்,
சென்னை - 600 092.
விலை ரூ.90

போட்டி

# எடுங்கள் எழுதுகோலை!

'பார்த்திபன் கனவு' தொடரை ஆவலுடன் படித்துக் கொண்டிருக்கும் வாசகர்களே, இதோ உங்களுக்கான போட்டி...



...அமரர் கல்கியின் எழுத்து நடையில், சொல் நளினத்தில், வர்ணனை வீச்சில் திளைத்து இருப்பீர்கள். இதுபோன்ற வர்ணனைகளை இப்போது புதிதாக வரும் படைப்புகளில் காண முடியவில்லையே என்ற ஆதங்கம் ஏற்பட்டிருக்குமே?



ஏன் நீங்களே ஓர் எழுத்தாளராகக் கூடாது? எடுங்கள் எழுதுகோலை? இங்குள்ள படத்தைப் பாருங்கள். ஒரு தாமரைக் குளமும் அதன் பின்னணியில் இயற்கை காட்சியும் உள்ளன. இந்தக் காட்சியை வர்ணித்து உங்கள் எழுதுகோல், காகிதத்தை உழுது பதனிட வேண்டும். சிறந்த வர்ணனைகளுக்குப் பரிசு உண்டு.

- முழு வெள்ளைத்தாளில் பத்து முதல் பதினைந்து வரிகளுக்கு மிகாமல் வர்ணனை இருக்க வேண்டும்.
- கீழ்க்கண்ட கூப்பனை கட்டாயம் பூர்த்தி செய்து உங்கள் படைப்புடன் அனுப்ப வேண்டும்.
- முடிவு தேதி 3.9.07. இதற்குப் பின் வருபவை போட்டியில் சேர்க்கப்பட மாட்டாது. ஆசிரியர் தீர்ப்பே இறுதி.
- இது அதிர்ஷ்டப் போட்டியல்ல, உங்கள் எழுத்துத் திறனின் அடிப்படையிலேயே பரிசு.

## பார்த்திபன் கனவு - பரிசுப் போட்டி ①

பெயர்:...................................................... வயது:......................

முகவரி: ..........................................................................................................

..........................................................................................................................

கல்கியில் மிகவும் பிடித்த பகுதிகளை வரிசைப்படுத்துங்கள் (ஏதாவது மூன்று மட்டும்)

1.......................................... 2 .......................................... 3 ..........................................

நீங்கள் எதிர்பார்க்கும் பகுதிகள்:

1.......................................... 2 .......................................... 3 ..........................................

நீங்கள் வேண்டாமென நினைக்கும் பகுதிகள்:

1.......................................... 2 .......................................... 3 ..........................................

இதுவரை படித்த பார்த்திபன் கனவு தொடரில் உங்களுக்கு பிடித்த இடம் எது? (2 வரிகளில்)

..........................................................................................................................

..........................................................................................................................

# 9. விக்கிரமன் சபதம்

சித்திரங்கள் எல்லாம் பார்த்து முடிந்ததும் விக்கிரமன் தயங்கிய குரலில், ''அப்பா'' என்றான். மகாராஜா அவனை அன்பு கனியப் பார்த்து, ''என்ன கேட்க வேண்டுமோ கேள், குழந்தாய்! சொல்ல வேண்டியதையெல்லாம் தயங்காமல் சொல்லிவிடு. இனிமேல் சந்தர்ப்பம் கிடைப்பது அரிது'' என்றார்.

''ஒன்றுமில்லை, அப்பா! இந்தச் சித்திரங்கள் எல்லாம் எவ்வளவு நன்றாயிருக்கின்றன என்று சொல்ல ஆரம்பித்தேன். இவ்வளவு அற்புதமாய்ச் சித்திரம் எழுத எப்போது கற்றுக்கொண்டீர்கள்? நமது சித்திர மண்டபத்தில்கூட இவ்வளவு அழகான சித்திரங்கள் இல்லையே!'' - என்றான் விக்கிரமன்.

மகாராஜா மைந்தனைக் கட்டி அணைத்துக்கொண்டார். ''என் கண்ணே! என்னுடைய சித்திரத் திறமையை நீ ஒருவன் வியந்து பாராட்டியதே எனக்குப் போதும். வேறு யாரும் பார்த்துப் பாராட்ட வேண்டியதில்லை. என் மனத்திலிருந்த ஏக்கம் இன்று தீர்ந்தது'' என்றார்.

''ஆனால் அப்பா! எதற்காக உங்கள் வித்தையை நீங்கள் இவ்விதம் ஒளித்து வைத்திருக்க வேண்டும்? இந்த ஆச்சரியமான சித்திரங்களைப் பற்றி நீங்கள் வெட்கப்பட வேண்டிய அவசியம் என்ன? ஆகா! இந்த உருவங்கள் எல்லாம் எவ்வளவு தத்ரூபமாய் உணர்ச்சி பெற்று விளங்குகின்றன? முகங்களிலேதான் எத்தனை ஜீவகளை! இவ்வளவு ஆச்சரியமான சித்திரங்களை வேறு யார் எழுத முடியும்? ஏன் இந்த இருட்டு மண்டபத்தில் இவற்றைப் பூட்டி வைத்திருக்க வேண்டும்? எல்லாரும் பார்த்து சந்தோஷப்பட்டாலென்ன?'' என்று விக்கிரமன் ஆத்திரமாய்ப் பேசினான்.

அப்போது பார்த்திப மகாராஜா சொல்லுகிறார்:

''கேள், விக்கிரமா! இந்த உலகத்தில் எவன் அதிகாரமும் சக்தியும் பெற்றிருக்கிறானோ அவனிடம் உள்ள வித்தையைத்தான் உலகம் ஒப்புக்கொண்டு பாராட்டும். காஞ்சியில் மகேந்திர சக்கரவர்த்தி இருந்தாரல்லவா? ஒருதடவை பெரிய வித்வத் சபை கூடி அவருக்குச் 'சித்திரக்காரப் புலி' என்ற பட்டம் அளித்தார்கள். மகேந்திரவர்மருடைய சித்திரங்கள் மிகவும் சாமானியமானவை. ஆனாலும், அவற்றைப் புகழாதவர் கிடையாது. இப்போதுள்ள நரசிம்ம சக்கரவர்த்திக்கு இதுமாதிரி எத்தனையோ பட்டப் பெயர்கள் உண்டு. சித்திரக் கலையில் சிங்கம்! கான வித்தையில் நாரதர்! சிற்பத்தில் விசுவகர்மா! உலகம் இப்படியெல்லாம் அவரைப் போற்றுகிறது. ஏன்? அவரிடம் பெரிய சைன்யம் இருப்பதினாலேதான்; அவருடைய சாம்ராஜ்



அமரர் கல்கி

# பார்த்திபன் கனவு

யம் பெரியதாயிருப்பதனால்தான். குழந்தாய்! தெய்வத்துக்கு ஏழை, செல்வன் என்ற வித்தியாசம் இல்லை. இறைவனுக்குச் சக்கரவர்த்தியும் ஒன்றுதான்! செருப்பு தைக்கும் சக்கிலியனும் ஒன்றுதான்! ஆனாலும், இந்த உலகத்தில் தெய்வத்தின் பிரதிநிதிகளாயிருப்பவர்கள்கூட பெரிய படைபலம் உள்ளவன் பக்கமே தெய்வமும் இருப்பதாய்க் கருதுகிறார்கள். மகேந்

நடிப்பு உலகத்தை ஏமாற்றிவிட்டது. புராதன காலத்திலிருந்து சோழ வம்சத்தினர் தான் சைவத்தையும், வைஷ்ணவத்தையும் வளர்த்து வந்தார்கள். சிராப்பள்ளிப் பெருமானையும், ஸ்ரீரங்கநாதனையும் குலதெய்வங்களாகப் போற்றி வந்தார்கள். ஆனால், இன்றைய தினம் சிவனடியார்களும், வைஷ்ணவப் பெரியார்களும் யாருடைய சபா மண்டபத்துக்குப் போகிறார்



திரன் வெகுகாலம் ஜைன மதத்தில் இருந்தான்! சிவனடியார்களை எவ்வளவோ துன்பங்களுக்கு உள்ளாக்கினான். பிறகு, அவனுக்குத் திடீரென்று ஞானோதயம் உண்டாயிற்று. சிவபக்தன் என்று வேஷம் போட்டு நடித்தான். விக்கிரமா! மகேந்திரனும் சரி, அவன் மகன் நரசிம்மனும் சரி, நடிப்புக் கலையில் தேர்ந்தவர்கள்; விதவிதமான வேஷங்கள் போட்டுக் கொள்வார்கள்; நம்பினவர்களை ஏமாற்றுவார்கள். இவர்களுடைய சிவபக்தி

கள்? திரிலோகாதிபதியான காஞ்சி நரசிம்ம சக்கரவர்த்தியின் ஆஸ்தான மண்டபத்துக்குத்தான்! என்னுடைய சித்திரங்களைப் பிறர் பார்ப்பதை நான் ஏன் விரும்பவில்லை என்று இப்போது தெரிகிறதா? சோழ நாடு சிற்றரசாயிருக்கும் வரையில், 'பார்த்திபன் சித்திரம் வேறு எழுத ஆரம்பித்து விட்டானா' என்று உலகம் பரிகசிக்கும். விக்கிரமா இன்னொரு விஷயம் நீ மறந்து விட்டாய்...!'' என்று நிறுத்தினார் மகாராஜா.

''என்ன அப்பா?'' என்று விக்கிரமன் கேட்டான்.

''இவை, கேவலம் சித்திரத் திறமையைக் காட்டுவதற்காக மட்டும் எழுதிய சித்திரங்கள் அல்லவே, குழந்தாய்! என்னுடைய மனோரதங்களை; என் இருதய அந்தரங்கத்தில் பொங்கிக் கொண்டிருக்கும் ஆசைகளையல்லவா இப்படிச் சித்திரித்திருக்கிறேன்? இந்தச் சித்திரங்களும் வந்து பார்க்கும்படி மண்டபத்தைத் திறந்துவிட வேண்டும். அந்தப் பாக்கியம், விக்கிரமா, என் காலத்தில் எனக்குக் கிடைக்கப் போவதில்லை. உன்னுடைய காலத்திலாவது நிறைவேற வேண்டுமென்பது என் ஆசை. என்னுடன் நீயும் போர்க்களத்துக்கு வருவதாகச் சொல்வதை நான் ஏன் மறுக்கிறேன் என்று இப்போது தெரி



களை இப்போது பார்க்கிறவர்கள் சிரிக்க மாட்டார்களா? 'வீணாசை கொண்டவன்' 'எட்டாத பழத்துக்குக் கொட்டாவி விடுகிறவன்' என்றெல்லாம் பரிகசிக்க மாட்டார்களா? ஆகையினாலேயே, இந்த மண்டபத்தை இப்படி இருள் சூழ்ந்ததாய் இப்போது வைத்திருக்கிறேன். இந்தச் சித்திரக் காட்சிகள் எப்போது உண்மைச் சம்பவங்களாகத் தொடங்குமோ, அப்போதுதான் மண்டபத்தில் வெளிச்சம் வரச் செய்ய வேண்டும். அப்போதுதான் எல்லா ஜனங்கிறதல்லவா?''

''தெரிகிறது, அப்பா!''

''என் கனவை நிறைவேற்றுவதற்காக நீ உயிர் வாழ வேண்டும். சோழ நாட்டின் உன்னதமே உன் வாழ்க்கையின் நோக்கமாயிருக்க வேண்டும். சோழர் குலம் பெருமையடைவதே அல்லும் பகலும் உன்னுடைய நினைவாயிருக்க வேண்டும். சோழரின் புலிக் கொடி வேறு எந்த நாட்டின் கொடிக்கும் தாழாமல் வானளாவிப் பறக்க



வேண்டுமென்று சதாகாலமும் நீ சிந்திக்க வேண்டும். நாளை மறுதினம் நான் போருக்குக் கிளம்புகிறேன். யுத்த களத்திலிருந்து திரும்பி வருவேனென்பது நிச்சயமில்லை. விக்கிரமா! போர்க்களத்தில் மடிகிறவர்கள் வீர சொர்க்கம் அடைகிறார்களென்று புராணங்கள் சொல்லுகின்றன. ஆனால், நான் வீர சொர்க்கம் போக மாட்டேன். திரும்பி இந்தச் சோழ நாட்டுக்குத்தான் வருவேன். காவேரி நதி பாயும் இந்தச் சோழ வளநாடுதான் எனக்குச் சொர்க்கம். நான் இறந்த பிற்பாடு என்னுடைய ஆன்மா இந்தச் சோழநாட்டு வயல் வெளிகளிலும், கோயில் குளங்களிலும், நதிக் கரைகளிலும், தென்னந்தோப்புகளிலும்தான் உலாவிக் கொண்டிருக்கும். அப்போது, 'பார்த்திபன் மகனால் சோழர் குலம் பெருமையடைந்தது' என்று ஜனங்கள் பேசும் வார்த்தை என் காதில் விழுமானால், அதைவிட எனக்கு ஆனந்தமளிப்பது வேறொன்றுமிராது. எனக்கு நீ செய்ய வேண்டிய ஈமக்கடன் இதுதான். செய்வாயா, விக்கிரமா?''

இளவரசன் விக்கிரமன், ''செய்வேன், அப்பா! சத்தியமாய்ச் செய்வேன்!'' என்று தழுதழுத்த குரலில் சொன்னான். அவன் கண்களில் நீர் துளித்து, முத்து முத்தாகக் கீழே சிந்திற்று.

இதையெல்லாம் பார்த்துக்கொண்டும் கேட்டுக்கொண்டும் இருந்த பொன்னனுடைய கண்களிலிருந்தும் தாரை தாரையாகக் கண்ணீர் பெருகிக் கொண்டிருந்தது.

மகாராஜா அவனைப் பார்த்து, ''பொன்னா! எல்லாம் கேட்டுக் கொண்டிருந்தாயல்லவா? இளவரசரிடம் உண்மையான அன்புள்ள சிலராவது அவருக்குத் துணையாக இருக்க வேண்டாமா? அதற்காகத்தான் உன்னை இருக்கச் சொல்லுகிறேன். என்னுடன் நீ யுத்தத்துக்கு வருவதைக் காட்டிலும் இளவரசருக்குத் துணையாக இருந்தாயானால், அதுதான் எனக்குத் திருப்தியளிக்கும். இருக்கிறாயல்லவா?'' என்று கேட்டார்.

பொன்னன் விம்மலுடன் ''இருக்கிறேன், மகாராஜா!'' என்றான்.

## 10. படை கிளம்பல்

உறையூரில் அன்று அதிகாலையிலிருந்தே அல்லோலகல்லோலமாயிருந்தது. பார்த்திப மகாராஜாவின் பட்டாபிஷேகத்தின்போதும் மகேந்திர வர்ம சக்கரவர்த்தியின் விஜயத்தின் போதும்கூட, உறையூர் வீதிகள் இவ்வளவு அழகாக அலங்கரிக்கப்படவில்லையென்று ஜனங்கள் பேசிக்கொண்டார்கள். வீட்டுக்கு வீடு தென்னங்குருத்துக்களினாலும் மாவிலைகளினாலும் செய்த தோரணங்கள் தொங்கிக்கொண்டிருந்தன. வீடுகளின் திண்ணைப் புறங்களிலெல்லாம் புதிய கண்ணாம்பும் சிவப்புக் காவியும் மாறி மாறி அடித்திருந்தது. ஸ்திரீகள் அதிகாலையிலேயே எழுந்திருந்து, தெரு வாசலைச் சுத்தம் செய்து, அழகான கோலங்கள் போட்டு, வாசலில் குத்து விளக்கு ஏற்றி வைத்தார்கள். பிறகு, ஆடை ஆபரணங்

## மாரப்ப பூபதிக்கு ஏதோ விபத்தாம்! அவர் போருக்கு வரவில்லையாம்!

களினால் நன்கு அலங்கரித்துக்கொண்டு போருக்குப் படை கிளம்பும் வேடிக்கை பார்ப்பதற்காக வாசல் திண்ணைகளிலோ, மேல் மாடிகளின் சாளரங்களின் அருகிலோ வந்து நின்றுகொண்டார்கள்.

விடிய ஒரு சாமம் இருக்கும்போதே, அரண்மனையிலுள்ள பெரிய ரண பேரிகை முழங்கத் தொடங்கியது. அதனுடன் வேறு சில சப்தங்களும் கலந்து கேட்கத் தொடங்கின. குதிரைகள் கனைக்கும் சப்தம், யுத்த வீரர்கள் ஒருவரையொருவர் கூவி அழைக்கும் குரல், அவர்கள் இடையிடையே எழுப்பிய வீர முழக்கங்களின் ஒலி, வேல்களும் வாள்களும் ஒன்றோடொன்று உராயும்போது உண்டான கண கண ஒலி, போருக்குப் புறப்படும் வீரர்களை அவர்களுடைய தாய்மார்கள் வாழ்த்தி அனுப்பும் குரல், காதலிகள் காதலர்களுக்கு விடை கொடுக்கும் குரல்... இவ்வளவுடன் வழக்கத்துக்கு முன்னதாகவே துயில் நீங்கி எழுந்த பறவைகளின் கலகல சப்தமும் சேர்ந்து ஒலித்தது.

சூரிய உதயத்துக்கு முன்னாலிருந்தே அரண்மனை வாசலில் போர் வீரர்கள் வந்து குவியத் தொடங்கினார்கள். படைத் தலைவர்கள் அவர்களை அணிவகுத்து நிற்கச் செய்தார்கள். வரிசை வரிசையாகக் குதிரைப் படைகளும், யானைப் படைகளும், காலாட் படைகளும் அணிவகுத்து நிறுத்தப்பட்டன. எல்லாப் படைகளுக்கும் முன்னால் சோழர்களின் புலிக்கொடி வானளாவிப் பறந்தது. சங்கு, கொம்பு, தாரை, தப்பட்டை முதலிய வாத்தியங்களை முழக்குகிறவர்கள் படைகளுக்கு இடையிடையே நிறுத்தப்பட்டார்கள். பெரிய பேரிகைகளைச் சுமந்த ரிஷபங்களும் ஆங்காங்கு நின்றன. பட்டத்துப் போர் யானை அழகாக அலங்கரிக்கப்பட்டு, அரண்மனை வாசலில் கொண்டு வந்து நிறுத்தப்பட்டது.

இந்த மாதிரி அணிவகுப்பு நடந்து கொண்டிருக்கையில் அடிக்கடி போர் வீரர்கள் ''வீரவேல்'' ''வெற்றிவேல்'' என்று முழங்கிக் கொண்டிருந்தார்கள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் அரண்மனை முன் வாசலில் கலகலப்பு ஏற்பட்டது. ''மகாராஜா வருகிறார்!'' ''மகாராஜா வருகிறார்!'' என்று ஜனங்கள் பேசிக்கொண்டார்கள். அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே அரண்மனைக்குள்ளேயிருந்து கட்டியக்காரர்கள் இருவர், ''சோழ மண்டலாதிபதி பார்த்திப மகாராஜா வருகிறார்! பராக் பராக்!'' என்று கூவிக்கொண்டு வெளியே வந்தார்கள். வீதியில் கூடியிருந்த அந்தணர்களும் முதியோர்களும் ''ஜய விஜயீ பவா'' என்று கோஷித்தார்கள்.

மகாராஜா அரையில் மஞ்சள் ஆடையும் மார்பில் போர்க் கவசமும், இடையில் உடைவாளும் தரித்தவராய் வெளியே வந்தார். அவரைத் தொடர்ந்து ராணியும் இளவரசரும் வந்தார்கள். அரண்மனை வாசலில் மகாராணி தன் கையில் ஏந்தி வந்த ஆத்திமாலையை அவர் கழுத்தில் சூட்டினாள். அருகில் சேடி ஏந்திக் கொண்டு நின்ற மஞ்சள் நீரும் தீபமும் உள்ள தட்டை வாங்கி, மகாராஜாவுக்கு முன்னால் மூன்று சுற்றுச் சுற்றிவிட்டு, கையில் ஒரு துளி மஞ்சள் நீர் எடுத்து மகாராஜாவின் நெற்றியில் திலகமிட்டாள். அப்போது மீண்டும் மீண்டும் ''ஜய விஜயீ பவா'' ''வெற்றிவேல்'' ''வீர

வேல்'' என்னும் முழக்கங்கள் ஆகாயத்தை அளாவி எழுந்துகொண்டிருந்தன. சங்கு, கொம்பு, தாரை, தப்பட்டை முதலிய வாத்தியங்கள் காது செவிடுபடும்படி அதிர்ந்தன.

மகாராஜா வீதியில் நின்ற கூட்டத்தை ஒருதடவை தம் கண்களால் அளந்தார். அப்போது ஒரு ஏவலாளன் விரைந்து வந்து, மகாராஜாவின் காலில் விழுந்து எழுந்து கைகட்டி வாய் பொத்தி நின்றான். ''என்ன சேதி?'' என்று மகாராஜா கேட்கவும், ''மாரப்ப பூபதி இன்று காலை கிளம்பும்போது, குதிரை மீதிருந்து தவறிக் கீழே விழுந்து மூர்ச்சையானார். மாளிகைக்குள்ளே கொண்டு போய்ப் படுக்க வைத்தோம். இன்னும் மூர்ச்சை தெளியவில்லை'' என்றான்.

இதைக் கேட்ட மகாராஜாவின் முகத்தில் லேசாகப் புன்னகை பரவிற்று. அந்த ஏவலாளனைப் பார்த்து, ''நல்லது, நீ திரும்பிப் போ! பூபதிக்கு மூர்ச்சை தெளிந்ததும், உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ளச் சொன்னேன் என்று தெரிவி!'' என்றார்.

மேற்கண்ட சம்பாஷணை மகாராஜாவுக்கு அருகிலிருந்த ஒரு சிலருடைய காதிலேதான் விழுந்தது. ஆனாலும் வெகு சீக்கிரத்தில், ''மாரப்ப பூபதிக்கு ஏதோ விபத்தாம்! அவர் போருக்கு வரவில்லையாம்'' என்ற செய்தி பரவிவிட்டது.

பிறகு, மகாராஜா அருகில் நின்ற விக்கிரமனை வாரி எடுத்து மார் போடணைத்துக் கொண்டு உச்சி முகர்ந்தார். "குழந்தாய்! நான் சொன்னதெல்லாம் ஞாபகம் இருக்கிறதா? மறவாமலிருப்பாயா?'' என்றார். ''நினைவில் இருக்கிறது, அப்பா! ஒரு நாளும் மறக்க மாட்டேன்'' என்றான் விக்கிரமன். பிறகு மகாராஜா மைந்தனின் கையைப் பிடித்து அருள்மொழியினிடம் கொடுத்து, "தேவி! நீ தைரியமாயிருக்க வேண்டும். சோழர் குலச் செல்வத்தையும், புகழையும் உன்னிடம் ஒப்புவிக்கிறேன். வீர பத்தினியாயிருந்து என் கோரிக்கையை நிறைவேற்ற வேண்டும். முகமலர்ச்சியுடன் இப்போது விடைகொடுக்க வேண்டும்'' என்றார்.

**"குழந்தாய் நான் சொன்னதெல்லாம் ஞாபகம் இருக்கிறதா? மறவாமலிருப்பாயா?"**



அருள்மொழி, கண்ணில் நீர் பெருக, நெஞ்சை அடைக்க, ''இறைவனுடைய அருளால் தங்கள் மனோரதம் நிறைவேறும்; போய் வாருங்கள்'' என்றாள்.

மகாராஜா போர் யானை மீது ஏறிக் கொண்டார். மறுபடியும் போர் முரசுகளும், தாரை தப்பட்டை எக்காளங்களும் ஏககாலத்தில் காது செவிடுபடும்படி முழங்கின. உடனே அந்தச் சோழ நாட்டு வீரர்களின் படை அங்கிருந்து பிரயாணம் தொடங்கிற்று.

(தொடரும்)



# ரகசியம்!

பந்தியில் அமர்ந்திருக்கிறேன்
முன் பின் தெரியாதவளைப் போல்
பரிமாறிச் செல்கிறாய்

எல்லோரும் சொல்கிறார்கள்
முழுப் பூசணிக்காயை
சோற்றில் மறைக்க முடியாதென

அவர்கள் அறிந்திருக்க
நியாயமில்லை
முழுக் காதலை முந்தானைக்குள்
மறைக்கும் உன் சாதுர்யம் பற்றி

விழுங்குவதெப்படியென
விழித்துக்கொண்டிருக்கிறேன்
நீ
சோற்றைப் பரிமாறிவிட்டு
இதயம் தின்ற ரகசியத்தை

—கோ.பாரதிமோகன்

உங்கள் வீட்டுக்குப் பக்கத்தில் ஒரு பாலம் கட்டுகிறார்கள் அல்லது சாலை போடுகிறார்கள். ஆனால், உபயோகப்படுத்தும் கட்டுமான பொருட்கள், மிகவும் தரம் குறைவாக இருப்பதைப் பார்க்கிறீர்கள். இந்த நிலையில் முன்பெல்லாம் வயிறு எரிந்து போவதற்கு மட்டும்தான் சாமான்யர்களால் முடிந்தது. ஆனால், இப்போது அந்தக் குறிப்பிட்ட பணிக்குத் திட்ட மதிப்பீடு, செலவு ஒப்பந்த விவரம் போன்ற எல்லாவற்றையும் அரசிடமிருந்து பெற்று, மக்கள் பணம் வீணடிக்கப்பட்டுள்ளது என்று முறையிட நீதிமன்றத்துக்குப் போக முடியும். இந்த உரிமையை நமக்குக் கொடுத்திருப்பதுதான் 2005 ஆம் ஆண்டு பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட தகவல் பெறும் உரிமை சட்டம்.

• ஜம்மு-காஷ்மீர் மாநிலம் தவிர இந்தியா முழுக்க இந்தச் சட்டம் நடைமுறையில் இருக்கிறது. அரசிடம் உள்ள ஆவணங்கள், உத்தரவுகள், சுற்றறிக்கைகள், ஒப்பந்தங்கள், கருத்துக்கள் போன்றவை காகிதத்தில் இருந்தாலும் சரி; கம்யூட்டரில் இருந்தாலும் சரி. கேட்கும் தகவலை மக்களுக்குக் கொடுக்கவேண்டியது அரசாங்கத்தின் கடமை.

• இந்தத் தகவல் அறியும் சட்டம் சரியாக அமுல்படுத்தப்படுகிறதா என்பதைக் கண்காணிக்க, தவறுகளைத் திருத்த, தகவலை மறைக்கும் அதிகாரிகளைத் தண்டிக்க என முறையான அமைப்புகள் உள்ளன.

• இந்த அமைப்புகளில் உயர்ந்தது மத்திய தகவல் ஆணையம்தான். மாநிலங்களில், மாநில தகவல் ஆணையம் உள்ளது. தவிர, ஒவ்வொரு துறையிலும் தகவல் அதிகாரி என்று ஒருவர் அறிவிக்கப்பட்டிருக்கிறார். இந்தத் தகவல் அதிகாரிக்கு மேல் அப்பீல் செய்ய உயர்தகவல் அதிகாரியும் உண்டு.

• இந்தச் சட்டத்தின் அடிப்படையில் வெறும் தகவலைப் பெறும் உரிமை மட்டுமல்ல, ஆவணங்களைப் பார்வையிடும் உரிமையும், பார்வையிட்ட ஆவணங்களில்



நமக்குத் தேவையானவற்றை நகல் எடுத்துக்கொள்ளும் உரிமையும் உண்டு.

● ஆனால், இந்தச் சட்டத்தின் மூலம் பொது நோக்கமில்லாமல் தனிப்பட்ட நபர் மற்றும் தனியார் நிறுவனங்களைப் பற்றிய விவரங்களைக் கேட்டுப் பெறமுடியாது. இந்தியாவின் இறையாண்மை, பாதுகாப்பு... ஆகியவற்றைப் பாதிக்கும் விஷயங்கள், நாடாளுமன்ற, சட்டமன்ற உரிமையை மீறும் விவகாரங்கள், புலனாய்வுத் துறையிலுள்ள விவரங்கள் போன்றவற்றையும் பெற முடியாது.



# தகவல் பெற 10 ரூபாய்!

● மக்களிடமிருந்து தகவல் கேட்கும் கடிதம் வந்ததிலிருந்து சரியாக முப்பது நாட்களுக்குள், அந்தத் தகவலை சம்பந்தப்பட்ட அதிகாரி கொடுத்து விட வேண்டும். அப்படிக் கொடுக்க இயலாது என்றால், அதையும் அதே காலகட்டத்துக்குள் தெரிவித்துவிட வேண்டும்.

● தகவல் கேட்கும் விண்ணப்பத்துடன் ரூபாய் பத்துக்கான வரைவோலை கொடுக்க வேண்டும். வறுமைக் கோட்டுக்குள் உள்ளவர்களுக்கு இந்தக் கட்டணம் கிடையாது. குறிப்பிட்ட காலக் கெடுவுக்குள் தகவலைக் கொடுக்க முடியவில்லை என்றால், பணத்தைத் திருப்பிக் கொடுத்துவிடுவது மட்டுமல்லாமல், அந்தத் தகவலையும் இலவசமாகக் கொடுக்க வேண்டும்.

● விண்ணப்பத்தை வாங்க மறுத்தாலோ அல்லது கேட்கும் தகவலை தர மறுத்தாலோ அல்லது தவறான தகவலைத் தந்தாலோ சம்பந்தப்பட்ட தகவல் அதிகாரிக்கு அபராதம் உண்டு.

● மாநில மற்றும் மத்திய ஆணையத்தின் தீர்ப்புகளை எதிர்த்துப் போடப்படும் வழக்குகளை, கீழ் நீதிமன்றங்கள் எடுத்துக்கொள்ள முடியாது. ஆனால் உயர்நீதிமன்றமும், உச்சநீதிமன்றமும் விசாரிக்க முடியும்.

● வழக்கப்படி மற்ற சட்டங்களைபோல சுயநல அடிப்படையில் இந்தச் சட்டத்தைப் பயன்படுத்துவோர் இருந்தாலும், இதுபோன்ற சட்டங்களால் ஜனநாயகம் மேலும் வலுவடையும் என்பதில் சந்தேகமில்லை. உலகில் எழுபதுக்கும் மேற்பட்ட நாடுகளில் இது போன்ற சட்டம் அமுலில் உள்ளது.

– கௌசி

**அன்பு, வெறும் பேச்சாக இல்லாமல் காரியத்தில் வெளிப்பட வேண்டும்!**

# நைச்சியம்!

'எல்லா உயிர்களும் ஒன்றே. எல்லாவற்றிலும் ஈஸ்வரன் இருக்கிறான்' என்று ஒருவன் உணர்கிறபோதுதான் அவனுக்கு அருள் உண்டாகிறது. இவன், தன் மனிதர்களுடன் சமமான நிலையில் இருந்துகொண்டு பிரியம் காட்டுவதைவிட இன்னும் ஒருபடி கீழே இறங்கி, தன்னைக் குறைத்துக்கொண்டு, மற்றவனை ஈஸ்வரனாக நினைத்துதான் சேவை செய்கிறான். 'நைச்சியம்' என்று இதை வைஷ்ணவர்கள் விசேஷித்துச் சொல்வார்கள். தன்னைத் தாழ்ந்தவனாக, நீசனாக நினைத்து இன்னொருத்தனுக்கு சேவை செய்வதுதான் 'நைச்சியம்'. இப்படி இவன் தன்னைக் குறைத்துக் கொள்கிறபோதுதான் இவனுடைய அன்பு வெறும் பேச்சாக, எண்ணமாக மட்டுமில்லாமல் அதற்குக் காரிய ரூபத்திலேயே தெய்விகமான சக்தி உண்டாகி, அது 'அருளாக' ஆகிவிடுகிறது! கொஞ்சம்கூட மமதையே இல்லாமல், 'நாம் பெரியவர், உபகாரம் பண்ணுகிறோம்' என்ற அகந்தையே இல்லாமல் இவன் சமஸ்தப் பிராணிகளிடமும் ஈசுவர ஆராதனையாக அன்பைச் செலுத்துகிறபோது, அதுவே இவனை சகல பிராணிகளுக்கும் மேலே உயர்த்திவிடுகிறது. இவனுடைய அன்பு வெறும் பேச்சாகவும் எண்ணமாகவும் மட்டுமில்லாமல், காரியத்திலேயே ஈஸ்வரன் அநுக்கிரஹத்தை வாங்கித் தரக்கூடிய அருட்சக்தியைப் பெற்றுவிடுகிறது.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

**அருள்வாக்கு**

# கண்டுகொண்டேன்.

**தன்னைத்தானே காதலிப்பவனால்தான் எதிர்பாலரையும் காதலிக்க முடியும்!**

**-யாரோ**

"இன்று மணவிழா காணும் ராம்குமார் - திலகா தம்பதிக்கும், மணமக்களை வாழ்த்த வந்திருக்கும் உறவினர்கள் மற்றும் நண்பர்களுக்கும் எங்களது 'கண்ணன் ஸ்ருதி' சார்பாக நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறோம். நம்ம மாப்பிள்ளை ராம்குமார் சாதாரண ஆளில்லீங்க. சினிமாவுல இருக்கிற அத்தனைப் பேரையும் இவருக்குத் தெரியும்... இவரைதான் அவங்களுக்குத் தெரியாது."

கூட்டத்தில் சட்டென சிரிப்பொலி! நான் தொடர்ந்தேன். "இவரை அவங்களுக்குத் தெரியறதா வெச்சப்போம். இவர் கல்யாணப் பத்திரிகைக் கொடுக்கப் போறார். அவங்க

அம்மாவின் முந்தானையைப் பிடித்துத் தொடர்ந்தவரைக்கும்தான் உறவுகளின் தொடர்பு. பிறகு நண்பர்கள், நூலகம், புத்தகம்... என்று மாறிப் போனேன்!

# கண்டுகொண்டேன்!

எப்படி ரியாக்ட் பண்றாங்கன்னு கற்பனையா இப்ப பார்ப்போம். முதல்ல நம்ம விஜயகாந்த் வீட்டுக்குப் போறார்'' என்றவன் சட்டென குரலை மாற்றினேன்.

''வாப்பா ராம்குமார்! விஷயத்தைக் கேள்விப்பட்டேன். நம்ம தமிழ்நாட்டுல கல்யாண வயசுல எத்தனைப்பேர் இருக்காங்க தெரியுமா? அவங்கள்ல முதிர் கன்னிகள் எத்தனைப் பேர் தெரியுமா? அதுக்கு என்ன காரணம்? வறுமை! அந்த வறுமைக்கு காரணம் யாரு? மக்களைப் பத்தி சிந்திக்காம, ஊழல் செய்யற அரசியல்வாதிங்க. என்னோட தே.மு.தி.க. ஆட்சிக்கு வந்தா இந்த நிலை மாறும். இருபத்தொரு வயசுக்கு மேலேயும் கல்யாணம் பண்ணித் தராம ஒருத்தன் பொண்ணை வீட்டோடு வெச்சுட்டு இருந்தா, அவனோட ரேஷன் கார்டை ரத்து பண்ணுவேன். அதுக்கப்புறமும் சும்மா இருந்தான்னா, அவனோட கிரெடிட் கார்டு, பான் கார்டு, விசிட்டிங் கார்டு எல்லாத்தையும் பிடுங்கிடுவேன்.''

கூட்டத்தில் சிரிப்பொலி அதிகமானது. அடுத்து ரஜினி, கமல், விக்ரம், அஜித், விஜய்... என ஒவ்வொரு குரலாகப் பேசி முடித்து, வணக்கம் சொல்லி, எனது இருக்கைக்குத் திரும்பினேன். கூட்டம் கைத் தட்டி ஓய்ந்ததும், கண்ணன் மைக்கைப் பிடித்து ''உன் சமையலறையில் நான் உப்பா, சர்க்கரையா?'' என்று பாட ஆரம்பித்தான்.

''என்ன பிரபு ஒரு மாதிரியா இருக்கே?'' என்று கேட்டான் குணா.

''கிளம்புறப்ப அம்மாவோட சண்டை'' என்றேன்.

''என்ன சண்டை?''

''வேற என்ன? கல்யாண விஷயமா தான்! ஏதோ பொண்ணு ஜாதகம் வந்ததாம். எல்லாம் பொருத்தமா இருக்காம். எப்போ பார்க்கப் போகலாம்னு கேட்டாங்க. நான், வேணாம் அப்புறம் பாத்துக்குவோம்னேன். பிலுபிலுனு பிடிச்சுக்கிட்டாங்க. மனசுல என்ன நினைச்சுட்டிருக்கே? எங்களைச் சித்திரவதைப் பண்ணியே சாகடிக்கப் போறியான்னு ஒரே அழுகை. கிளம்பி வர்றதுக்குள்ளே போதும் போதும்னு ஆயிடுச்சு''என்றேன்.

''அவங்க புலம்பல் நியாயம்தானே? இன்னும் எத்தனை நாளைக்கு இப்படியே இருக்கப் போறே. அந்த மகேஸ்வரியையே இன்னும் நினைச்சுட்டுக் கல்யாணத்தைத் தள்ளிப் போடறியா? அப்படின்னா, உன்னைவிட பைத்தியக்காரன் யாருமில்லே. ஏன்னா அவளோடது உண்மையான காதலே இல்லை'' என்றான்.

நான் மௌனமாக இருந்தேன்.

'உன் சமையலறை' முடிந்து, அடுத்த பாடலுக்கு ஆயத்தமாக, குணா சென்று மைக்கைப் பிடித்தான்.

இப்படியொரு திருமண மண்டபத்தில்தான் மகேஸ்வரியை முதன்முதலில் பார்த்தேன். ஒரு வகையில் அது எனது தூரத்து உறவினரின் திருமணம்கூட. பலகுரல் மன்னனாக மேடையில் பேசிவிட்டு உறவினனாகக் கூட்டத்தில் பேசிக் கொண்டிருந்தேன். அப்போது முதுகில் ஒரு குரல்.

''ஹலோ பிரபு!''

திரும்பினேன். அவள் நின்றிருந்தாள். ''ரொம்ப நல்லா மிமிக்ரி பண்றீங்க.''

''தேங்க்ஸ்''என்றேன்.

''என்னைத் தெரியுதில்லே?'' என்று கேட்டாள்.

எனக்குச் சுத்தமாய்த் தெரியவில்லை.

காதல் பொன்மொழிக் கதை -5

ஆரணி யுவராஜ்

உறவினர் வீடுகளுக்குச் செல்வது, எனது பத்து, பன்னிரண்டு வயதுடன் நின்று போனது. அம்மாவின் முந்தானையைப் பிடித்துத் தொடர்ந்த வரைக்கும்தான் உறவுகளின் தொடர்பு. பிறகு நண்பர்கள், நூலகம், புத்தகம் என்று மாறிப் போனேன். கண்ணன் குழுவுடன் சேர்ந்த பிறகு சுத்தம்!

''நான் மகேஸ்வரி! கௌரி அத்தை வீட்டுக்கு வருவீங்களே... சின்ன வயசுல விளையாடுவோமே. அப்பவே நீங்க கவுண்டமணி, செந்தில் மாதிரி நடிச்சுக் காட்டுவீங்க'' என்றாள்.

**கௌ**ரி அத்தை வீடு ரொம்பப் பெரியது. காஞ்சிபுரத்தில் எந்த வீட்டின் விசேஷமாக இருந்தாலும், கௌரி அத்தை வீட்டில்தான் சென்று இறங்குவோம். பெண்கள் அங்கே முகம் கழுவி, புடைவை மாற்றிக்கொண்டு பிறகு செல்ல வேண்டிய இடத்துக்கு ஆயத்தமாவார்கள். அதுவரை பொடிசுகளாகிய நாங்கள் ஏதாவது விளையாடிக் கொண்டிருப்போம்.

வீட்டு வாசலில் இரண்டு அம்பாஸிடர் கார்களை நிறுத்தும் அளவுக்குப் பெரிய திண்ணைகள் இரண்டு இருக்கும். ஒரு திண்ணையில் மற்ற பொடிசுகள் உட்கார்ந்து வேடிக்கைப் பார்க்க, இன்னொரு திண்ணையில் நடனம், பாட்டு... என ஒவ்வொருவரும் ஏதாவது செய்வோம். நான் கவுண்டமணியாகப் பேசி, எட்டி உதைத்து செந்திலாக நானே வீழ்வேன். எல்லோரும் சிரிப்பார்கள்.

இப்போது நினைவுக்கு வந்தது. இந்த மகேஸ்வரி அப்போது பாட்டுப்பாடி நடனமாடுவாள். அப்போது குண்டாக இருந்தாள். இப்போது இளைத்துக் கச்சிதமான உடல்வாகில் இருக்கிறாள். கல்லூரியில் படிக்கிறாளாம். என் பல குரலை மிகவும் ரசித்தாளாம். ரொம்ப அறுக்காமல், கற்பனை வளத்துடன் கச்சிதமாகப் பேசினேனாம். எனது செல்போன் நம்பரை கேட்டு, அவளது செல்லில் பதிவுசெய்துக் கொண்டாள்.

ஒரு வாரம் கழித்து என்னோடு பேசினாள். கல்லூரித் தோழிகள் என்னைப் பார்க்க விரும்புகிறார்களாம். வர முடியுமா? என்று கேட்டாள். போனேன். என்னை அறிமுகம் செய்து வைத்தாள். அவர்கள் ஆளாளுக்கு என்னை அஜீத், சிம்பு, தனுஷ், சூர்யாவாக்கினர்.

அப்படி ஆரம்பித்ததுதான்! ஒரு வருடம் இருக்கும், நாங்கள் காதலிக்க ஆரம்பித்து. பிறகு மகேஸ்வரியின் வீட்டுக்கு விஷயம் தெரிந்தது. அவளது அப்பா வந்து நாகரிகமாய் மிரட்டினார்.

''சொந்தக்காரங்களா போயிட்டீங்களேன்னு பார்க்கறேன். இல்லேன்னா கை வேற, கால் வேறயா எடுத்துடுவேன். அது சின்னப் பொண்ணு. இவன் காட்டற கோமாளித்தனத்தைப் பார்த்து ரசிச்சிருக்கு. அதுக்காக பொண்ணை கோமாளி கையில பிடிச்சுத்தர முடியுமா? கல்யாண மண்டபத்துல காமெடியனா இருக்கறவன், மாலையைப் போட்டுட்டு மேடையில மாப்பிள்ளையா உட்கார நினைச்சா அதுக்கு ஒரு காமெடிப் பொண்ணா பார்க்கணும். கதாநாயகி மேல ஆசைப்படக் கூடாது'' என்றார்.

அந்த மனிதரின் 'மோசமான' நடவடிக்கைக்கு நிறைய உதாரணங்கள் சொல்லப்

-லீலாஜி

**அந்த நடிகர் நாலு படங்களில்தான் டாக்டரா நடித்தார்!**
**அப்புறம்?**
**அந்த அனுபவத்தில் ஒரு கிளினிக்கே ஆரம்பிச்சுட்டார்!**



# உங்கள் எதிரி யார்?



செம்மங்குடியின் நூற்றாண்டு விழா வைபவம் ஹம்சத்வனி சபா சார்பில் கொண்டாடப் பட்டது. அவர் சிஷ்யர் பி.எஸ்.நாராயண சுவாமி ஒரு சம்பவத்தைக் குறிப்பிட்டார்.

செம்மங்குடியின் கச்சேரி, கிராமம் ஒன்றில் ஏற்பாடு செய்யப்பட்டது. கூட்டத்திலிருந்த ஒரு நபரைக் கண்டவுடன் பின் பாடகராக மேடையில் அமர்ந்திருந்த பி.எஸ். நாராயண சுவாமி, அவர் காதில் கிசுகிசுத்தாராம். "உங்கள் எதிரி (குறிப்பிட்ட ரசிகருக்கு செம் மங்குடியின் பாணி பிடிக்காதாம்.) மூலையில் உட்கார்ந்திருக்கிறார்!"

கச்சேரி முடிந்த பிறகு, வேறு சந்தர்ப் பத்தில் பி.எஸ். என்னிடம், செம்மங்குடி சொன்னாராம்: "எனக்கு எதிரி என்று யாருமே கிடையாது. உண்மையில் என்னுடைய எதிரி யார் தெரியுமா? என் குரல்தான்! அன்றாடம் அதனுடன்தான் போராடுகிறேன்" என்று! உண்மையிலே, போராடிப் போராடி அற்புதமான வெற்றியும் பெற்றிருக்கிறாரே?

– ஈஸ்வர் குமார்

ரீடர்ஸ் கார்னர்

பட, எங்கள் வீட்டில் பயந்து விட்டார்கள். அப்படியும் நான் மகேஸ்வரியைச் சந்திக்க முயற்சித்தேன். அவள் தான் ஒரு கதா நாயகி என்பதை உணர்ந்து விட்டிருந்தாள். அதனால் இந்தக் காமெடியனை விட்டு விலகிவிட்டாள்!

'பட பட'வென்று கைகள் தட்டப்பட்டன. கச்சேரி முடிந்துவிட்டது. சாப்பிடச் சென்றோம்.

"அவர்தான் பொண்ணோட அப்பா. நமக்குப் பணம் செட்டில் பண்ணப் போறவரும் அவர்தான்" என்று என்னிடம் கிசுகிசுப்பாய்ச் சொன்ன குணா, அவரை நோக்கி, "வணக்கம் சார்" என்றான் சத்தமாக.

"வர்றேன்! வர்றேன்!" என்றபடி வந்தவர், மூன்றடி உயரம்தான் இருந்தார். பட்டு வேட்டி, சட்டையில் நிஜமாகவே வேடிக்கையாக இருந்தார்.

"கச்சேரி எப்படி சார் இருந்தது?" என்று கேட்டான் குணா.

"பிரமாதம்! அமர்க்களப் படுத்திட்டீங்க."

"அப்போ பேசினதுக்கு மேல ஏதாவது போட்டுக் குடுங்க."

"ஒரு தாம்பூலப் பையை அதிகமா தரச் சொல்றேன்" என்றார் சிரிப்புடன்.

"சார் பயங்கரமான ஆளு. விட்டா நம்மகிட்டே இருந்து காசு வாங்கிடுவார்" என்றான் குணா.

அவர் என்னைப் பார்த்தார் "தம்பி பேரென்ன?" என்று கேட்டார்.

"பிரபு"

"நல்லா மிமிக்ரி பண்ணீங்க. சாப்பிடுங்க, அப்புறம் பேசலாம்" என்று கூறிவிட்டுச் சென்றார்.

"சார் பார்க்கத்தான் மூணடி. பாய்ஞ்சா பதினாறடி. ரொம்ப ஜாலி டைப். போன வாரம் ஒரு ஷூட்டிங் ஸ்பாட்ல அசினைப் பார்த்து அரைமணி நேரமா பேசி ஃப்ரண்ட் டாயிட்டாரு! 'என் ஒய்ஃபை நான் காதலிச்சப்ப எத்தனைப் பேர் கிண்டல் செய்தாங்க தெரியுமா? நான் கண்டுக்கலை. ஏன்னா அவளைவிட என்னையே நான் அதிகமா காதலிச்சேன். நான் அழகானவன், திறமையானவன், தைரியமானவன்னு சொல்லிக் கிட்டேன். தன்னைத்தானே காதலிக்கிற ஒருத்தராலதான் எதிராளியையும் உண்மையா காதலிக்க முடியும்னு' சொல்வார். நல்ல மனுஷன்" என்றான் குணா.

போகிற அவரையே பார்த்தேன். 'நான் திருமணத்தை மறுப்பதன் காரணம் மகேஸ்வரியைக் காதலித்துத் தோற்றது அல்ல; என்னை நானே காதலிக்காததுதான்' என்பது புரிந்தது.

வீட்டுக்குப் போனதும் அம்மாவிடம் கேட்க வேண்டும். 'எப்ப பெண் பார்க்கப் போகலா'மென. ●

இவ்வளவு வேகத்துக்குப் போனா ரேஸ்ல எனக்கு முதலிடம் கிடைக்குமா?



**மேஷம்:** கல்வி வளம் மேலோங்கும். பணப் பற்றாக்குறை இருக்காது. உடல் ஆரோக்கியம் பாதிக்காது. வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். சிலருக்கு உத்தியோகத்தில் நல்ல இடத்துக்கு மாறுதல் கிட்டும். சனி/ராகு/கேது/குரு வழிபட்டு வந்தால் நற்பலன் மிகுதி ஆகும்.

# நடக்குமென்பார்;

**ரிஷபம்:** சுபகாரியம் கைகூடும். மறைமுக எதிர்ப்புகள் விலகும். உடல் நிலை பாதிக்காது. குழந்தைகளால் மன மகிழ்ச்சி ஏற்படும். வெளிநாட்டு அழைப்பு வந்துசேரும். பணக் கஷ்டம் இருக்காது. மகப்பேறு பாக்கியம் கிட்டும். ராகு/கேது/சனி வழிபட்டு வருதல் நற்பலன் ஏற்படும்.

**மிதுனம்:** தெய்வ அனுகூலம் ஏற்படும். திருமண காரியம் கைகூடும். வேலையில் நற்பெயர் ஏற்படும். வெளியூர் பிரயாணம் வந்து சேரும். படிப்பில் முன்னேற்றம் கிட்டும். எதிர்ப்புத் தொல்லை விலகும். குரு வழிபாடு செய்துவர நற்பலன் ஏற்படும்.

**கடகம்:** நண்பர்கள் விலகிச் செல்வார்கள். யாரிடம் வாக்குவாதம் செய்ய வேண்டாம். கொடுக்கல் வாங்கலில் கவனம் தேவை. வேலைபளு அதிகரிக்கும். உடல்நிலையில் கவனம் தேவை. குழந்தைகளால் மனமகிழ்ச்சி ஏற்படும். ராகு/கேது/சனி வழிபாடு செய்து வர நற்பலன் மிகுதி ஆகும்.

**சிம்மம்:** பதவி வரும் சூழ்நிலை உள்ளது. கல்வியில் முன்னேற்றம் ஏற்படும். கொடுகல் வாங்கலில் சிக்கல் தீரும். உடல்நிலை பாதிக்காது. தடைகள் விலகி திருமணம் கைகூடும். வழக்கு வெற்றிபெறும். ராகு/கேது/குரு/சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**கன்னி:** மனபிரமை தீரும். சுபசெலவுகள் உண்டாகும். குழந்தைகள் வழியில் நல்ல தகவல் வந்துசேரும். எதிர்ப்புகள் விலகும். பொருளாதாரம் கஷ்டம் இருக்காது. உடல்

**ல**க்னத்தில் சனி இருந்தால் என்னவாகும்?

- அ.ச.நாராயணன், பாளையம்கோட்டை

பொதுவாக லக்னத்தில் சனி இருந்தால் என்ன பலன் என்பதை கேட்டுத் தெரிந்துகொள்வது அரிச்சுவடி பாடம் போல் ஆகிவிடும். அவர் பிறந்த லக்னத்துக்கு சனி எங்கு இருக்கிறார். அவர் யாரால் ஆளபடுகிறார். அதனால்

பதில்கள்! பரத்வாஜ் பதில்கள்! பரத்வாஜ் பதில்கள்! பரத்வாஜ் பதில்க

தஞ்சை பரத்வாஜ்

# நடக்கும்!

26.8.07 முதல் 1.9.07 வரை

ஆரோக்கியம் நன்றாக இருக்கும். கல்வி வளம் நன்றாக இருக்கும். குரு/சனி வழிபாடு நற்பலனை அளிக்கும்.

**துலாம்:** மகப்பேறு கிட்டும். வாக்கு நாணயம் காப்பாற்றப்படும். செலவுகள் சுபமானதாக இருக்கும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் கிட்டும். கூட்டாளிகள் விலகிச் செல்வார்கள். வெளிநாட்டு அழைப்பு வந்துசேரும். ராகு/கேது வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**விருச்சிகம்:** குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். தூரதேச பிரயாணம் செல்ல வேண்டி இருக்கும். சிலருக்கு வேலையில் மாற்றம் ஏற்படும். தாயின் உடல்நிலை பாதிக்கப்படும். எதிர்ப்புத் தொல்லைகள் விலகும். புதிய தொழில் அபிவிருத்தி ஏற்படும். ராகு/கேது/குரு/சனி வழிபாடு நற்பலனை அளிக்கும்.

**தனுசு:** வெளிநாட்டு அழைப்புகள் கிட்டும். வழக்கு, வியாபாரம் வெற்றி அளிக்கும். தெய்வ அநுகூலம் ஏற்படும். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். மகான்கள் ஆசி கிட்டும். வீடு/மனை வாங்க நல்ல தருணம். மனநிம்மதி ஏற்படும். குரு வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**மகரம்:** உணவுக் கட்டுப்பாடு அவசியம். வீடு-மனை மூலம் ஆதாயம் கிட்டும். யாருக்கும் ஜாமீன் போடக் கூடாது. கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கை அவசியம். கூட்டுத் தொழில் செய்பவர் உஷார். வண்டி வாகனங்களில் செல்லும் போது போதிய கவனம் தேவை. ராகு/கேது/சனி வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**கும்பம்:** வேலையில் மாற்றம் உண்டாகும். புதிய வேலை வாய்ப்புக் கிட்டும். மனக் குழப்பம் நீங்கும். வேலை பளு அதிகரிக்கும். நண்பர், உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். வியாபாரத்தில் நல்ல லாபம் கிட்டும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. வராத நிலுவைகள் வந்து சேரும். ராகு/கேது/குரு/சனி வழிபட்டு வந்தால் நன்மை பயக்கும்.

**மீனம்:** வெளிநாடு செல்லும் வாய்ப்பு வந்து சேரும். தடைகள் விலகி, திருமணம் கைகூடும். வியாபாரத்தில் நல்ல லாபம் ஏற்படும். குழந்தைகளால் மன மகிழ்ச்சிக் கிட்டும். கல்விவளம் மேலோங்கும். உடல்நிலை நன்றாக இருக்கும். வழக்கு வெற்றி அளிக்கும். பரிகாரம் தேவை இல்லை. ●

---

என்ன பலன் நடக்கும் என்று சொல்வது சரியான பலனை அளிக்கும்.

**என் மகனின் எதிர்காலம் எப்படியிருக்கும்? - என்.பானுமதி, மும்பை**

உங்கள் மகனுக்கு *30/1/2008*க்குள் திருமணம் முடியும். படித்த, நல்ல வேலையில் உள்ள பெண் அமைவாள். பரிகாரம் தேவை இல்லை.

ரத்வாஜ் பதில்கள்! பரத்வாஜ் பதில்கள்! பரத்வாஜ் பதில்கள்! பரத்வாஜ் ப

***கதவுகளை***
***அறைந்து சாத்தும் தேவதைகள்***
***ஒருபோதும் மூடுவதில்லை***
***ஜன்னல்களை.***

- இது ஓர் இளங்கவிஞனின் அனுபவக் கவிதை. ஆனால், கிளாமருலாக்கள் தங்களின் ஜன்னல்களை மட்டுமல்ல கதவுகளையும் மூடுவதில்லை.

இந்தக் கவிதையின் உண்மையோடு கச்சிதமாகப் பொருந்திப் போகும் அழகு, கிளாமருல்லாக்களுக்கும் உண்டு. ஆர்க்குவேட் ஆர்ட்டரி எனும் வளைவுத் தமனிகளாகக் குடைவிரிக்கும் சாதாரண குட்டி நரம்புகள், தன்னைத்தானே வடிகட்டிகளாக மாற்றிக்கொண்டு, கிளாமருல்லாக்களாக அவதாரம் எடுக்கும் அதிசயத்தை, உங்கள் உடலில் வேறு எங்கேயும் பார்க்க முடியாது. அதனால்தான் கிளாமருல்லாக்களை, தேவதைகள் என்று கவிஞர்களின் மொழியில் வர்ணித்தோம். ''ஒரே நரம்பு, தமனிகளாகவும், வடிகட்டிகளாவும் இரட்டை அந்தஸ்து பெறும் அதி உன்னத தொழில் நுட்பத்தைக் கொண்ட ஒவ்வொரு மனித உடலும் ஒரு கோவில். அதில் குடியிருக்கும் உயிர்தான் கடவுள். எனவே, குடியாலும் புகையிலையாலும் அவரை உங்களுக்குள்ளிருந்து துரத்தி விடாதீர்கள்'' என்று உணர்ச்சி பொங்க, மனித குலத்தை பார்த்துச் சொன்னார் 'மார்செல்லோ மால்பிஷி'. யார் இவர்? கிளாமருல்லாவை ஆராய்ந்து, அதற்கு இப்படியொரு கிளாமரான பெயரைச் சூட்டிய இத்தாலிய உடற்கூறியல் அறிஞர்.

இத்தனை நுட்பமும் அழகும் ஒருங்கிணைந்த கிளாமருலாவைப் போர்த்திக் கொண்டிருக்கிறதே ஓர் உருண்டை, அதன் பெயர் பௌமென்ஸ் கேப்ஸ்யூல் (Bowman's capsule). கிளாமருல்லாவைத் தனக்குள் தாங்கிக் கொண்டிருக்கும் இதற்கு, கிளாமருல்லா கேப்ஸ்யூல் என்ற பெயரும் உண்டு. இந்தப் பௌமென்ஸ் கேப்ஸ்யூலுக்கு மொத்தம் மூன்று வழிகள். ரத்தம் உள்ளே வரும் அஃப்பரண்ட் ஆர்ட்டரி (Afferent arteriole)ஒன்று. உள்ளே வந்த இரத்தம், கிளாமருல்லா வடிகட்டி மூலம் சுத்திகரிக்கப்பட்டு, எஃப்பரண்ட் ஆர்ட்டரி (Efferent arteriole) எனப்படும் வெளிச் செல்லும் தமனி மூலம், இதயம் நோக்கிப் பயணப்படுவது இரண்டாவது வழி. கிளாமருலஸ் வடிகட்டிப் பிரித்தெடுத்த இரத்தமல்லாத நீர்ப்பகுதி மற்றும் கழிவுகளை ஒன்று திரட்டி, நெப்ரானின் குழல் பகுதிகளுக்கு அனுப்பி வைக்கும் மூன்றாவது வழி, பி.சி.டி எனப்படும் பிராக்ஸிமல்

## கிங்மேக்கர்

கன்வெலூடெட் டியூபில் (Proximal convoluted tuble). தன்னை கிளாமருல்லா வடிகட்டியாக மாற்றிக் கொள்ள, பௌமென்ஸ் உருண்டையில் உள்ளே நுழையும் எஃப்பரண்ட் ஆர்ட்டரி நரம்பின் வெளிப் பகுதியை எக்ஸ்டர்னா (Externa) என்கிறார்கள். ஐ.எஸ்.ஐ தரச்சான்று பெற்ற மின்சார ஒயரின் வெளிப்பகுதி உறுதியான பிளாஸ்டிக்கால் வார்க்கப் பட்டிருக்கும் இல்லையா! அப்படித்தான் இந்த எக்ஸ் டர்னா . அதே மின் ஒயரின் உள்ளே செல்லும் கலப்படமில்லாத காப்பர் கம்பி எத்தனை நெகிழ்ச்சியானது! அதைப்போல பாய்ந்து வரும் இரத்தத்தின் வேகத்திற்கு ஏற்ப, சுருங்கி விரிந்து தன்னை நெகிழ்ந்து கொடுக் கும் இந்தத் தமனி நரம்பின் உள்பகுதியை மீடியா (Media) என்ற பொறுத்தமாக அழைக்கிறார்கள்.




இந்த மீடியாவின் தசை நார்கள், 'ஸ்மூத் மசில்' எனப்படும் அதிமென்மையான வகையைச் சேர்ந்த அதிசயப்பிறவிகள். உங்களின் வயிறு, குடல், ரத்தக்குழாய்கள் மீடியாவில் இரத்தம் பாய்ந்து செல் லும் வழி நெடுக ஒட்டிக்கொண் டிருக்கும் வஸ்துவின் பெயர் இன் டிமா (indima). இறைவனே ரசித்து செய்த இந்த இண்டிரியர் டெக் கரேஷனில் உயிர்வாழும் அணுக் களின் பெயர்தான் 'என்டோதீலி யம்'. இந்த அணுகள் இலேசுபட்ட பிறவிகள் இல்லை. இவற்றை 'நைட்ரிக் நயாகரா' என்றால் பொருத்தமாக இருக்கும். அதாவது நைட்ரிக் ஆக்ஸைடை சதா சுரந்து

# கிளாமருலஸ்!

டாக்டர் பி.ரவிச்சந்திரன்

எல்லாமும் இந்த 'ஸ்மூத் மசில்' என்ற உள்ளாடையைத்தான் அணிந்திருக்கின் றன. இரத்தத்தை பீய்ச்சி அடிப்பதில் மீடி யாவில் உள்ள இந்த அதிமென்மை தசை நார்கள் அபார ஜித்துக்கள்.

இந்த ஜித்துக்களை தாஜா செய் வதற்கென்றே 'என்டோதீலியம்' (Endot-helium) என்ற அணுக்களை அப்பாய்ண்ட் செய்திருக்கிறார் மிஸ்டர் இறைவன். கொண்டே இருக்கும். எதற்கு? மீடி யாவின் மென்மையான தசைகளை தாஜா செய்து, எப்போதும் அவற்றை நெகிழ்ச்சியுடன் வைத்திருக்கதான்!

அடுத்து...? வடிகட்டுதலின் க்ளைமாக்ஸ‘உக்கு வந்துவிட்டீர்கள். அஃப்பரண்ட் ஆர்ட்டரியின் மீடியா வழியே நீங்கள் வந்தடைந்திருப்பது,

கிளாமருலாவின் அதிமுக்கியமான பாகம். 'கிளாமருல்லஸ் பேஸ்மெண்ட் மெம ரென்ஸ்' (Glomarulus basement membrance) எனப் படும் மிகமிக நுண்ணிய இழைகளைக் கொண்ட வலைப் பகுதி. பார்ப்பதற்கு ஒரு குட்டி ஆக்டோபஸ் போலத் தோன்றினா லும், தனக்குள் வரும் இரத்தத்தை, அதி லிருக்கும் நீர்ப் பகுதி, கழிவு பொருட்கள் இரண்டையும் மிக நுட்பமாக வடிகட்டும் மைக்ரோ ஜல்லடை, இது என்டொதீலி யம், பொடோ சைட்ஸ் (Podocytes), பெடிசெல் (Pedicel) ஆகிய அணுக்களால் பார்த்துப்பார்த்து நுணுக்கமாக நெயப்பட் டிருக்கிறது. ஜி.பி.எம். சல்லடை வடிகட்டு வதில் மட்டுமல்ல மின்சாரம் உற்பத்திச் செய்வதிலும் மகா சமர்த்து, எதற்கு மின் சாரம்? தனது சல்லடையின் துளைகள் வழியே, மிக நுண்ணிய அமைப்புகொண்ட அலுபு மின் ரசாயனம், போய் விடாமல் தடுத்து விடுவதற்குதான். ஜி.பி. எம்மில் ஏதேனுமொரு காரணத்தால் மின்சார உற் பத்தி தடைபட்டு, சிறுநீருடன் அலுபுமின் தொடர்ந்து வெளியேற ஆரம்பித்தால் என்ன நடக்கும்? அப்படியொரு பிரச்னை யில்தான் முதல் அத்தியாயத்தில் நீங்கள் பார்த்த ராம் மாட்டிக்கொண்டு, 'அய்யோ! இது கிட்னி பெயிலியராக இருக்குமோ?' என்று தேவையில்லாமல் குழப்பிக் கொண் டிருக்கிறார். இப்போது எங்களின் ஜி.பி.எம். சல்லடையில் பிரச்னை வந்தால் என்ன செய்வோம்?

**கிளாமருலாக்கள் ஒரு நிமிடத்துக்கு 120 மி.லி. இரத்தத்தை வடிகட்டி. அதில் ஒரு மில்லியை மட்டும் வேண்டாத கழிவுப்பொருளாக சிறுநீர் பைக்கு அனுப்பிவிடுகின்றன!**

மீனவர்கள், மீன் பிடித்து முடித்ததும் வலைகளை உலர்த்தும் முன்பு ஒரு முக்கிய மான வேலை செய்வார்கள். மீன் பிடிக்கும் வலையின் உள்ளேயும் இருக்காமல், வெளி யேயும் போகமல் இழைகளின் நடுவே யுள்ள ஒட்டைகளுக்குள் சிக்கிக் கொண் டிருக்கும் தேவையில்லாதவற்றை எடுத்துப் போட்டுவிட்டு வலையில் சிறு கிழிசல்கள் இருந்தால், உடனடியாக அவற்றைத் தைத்துவிடுவார்கள். இதனை 'கை பார்த் தல்' என்று சொல்லும் மீனவர்களுக்கு, வலையை வைத்துத்தான் வாழ்வு. எங் களுக்கோ ஜி.பி.எம்.மை வைத்துதான் வடி கட்டல். ஜி.பி.எம். வலை அல்லது வடி கட்டிக் கிழிந்துபோக வாய்ப்பிருக்கிறதா? நிறைய! வடிகட்டும் பணி நடக்கும்போது ஜி.பி.எம். வலையில் மாட்டிக் கொண்டு அதைக் காயப்படுத்தும் பொருட்கள், பாக் டீரியாக்கள், கிருமிகள் போன்றவற்றை அப்புறப்படுத்தி, கையோடு காயத்தையும் அசுரகதியில் குணப்படுத்திவிடும் மருத் துவ சேவையை 'மீஸ்சேஞ்சல்' (Mesangial cells) எனும் அணுக்கள் செய்கின்றன. கண் முன்னே ஜி.பி.எம். காயம் பட்டுக்கிடப் பதை சகித்துக்கொள்ள முடியாத, கருணை உள்ளம் கொண்ட இந்த அணுக்கள், ஓடோ டிச்சென்று இப்படி 'கை பார்க்கும்' பணியை 'மீஸ்சேஞ்சல் மேட்ரிக்ஸ்' என் கிறார்கள்.

இத்தனை ஆச்சர்யங்களை தன்னகத்தே ஒளித்து வைத்திருக்கும் கிளாமருலஸ் உங்களது ஒவ்வொருவரது சிறுநீரகத்திலும் இறுதிசெய்யப்பட்ட எண்ணிக்கையில் (Fixed Quota) மட்டுமே உள்ளது. கிளாமரு லஸ் ஒன்று அழிந்தாலும் அத்துடன் அதன் ஆயுள் முடிந்தது. ஆனால், பல கோடி கிளா மருலாக்களை இறைவன் எல்லோருக்கும் பரிசாகக் கொடுத்திருக்கிறார். இதை 'ரீனல் நெப்ரான் மாஸ்' என்று அழைக்கிறார்கள். எங்கள் கிளாமருலாக்கள் ஒரு நிமிடத்துக்கு 120 மிலி இரத்தத்தை வடிகட்டி, அதில் ஒரு மில்லியை மட்டும் வேண்டாத கழிவு பொருளாக சிறுநீர் பைக்கு அனுப்பிவிடு கிறது. மீதம் உள்ள 119 மில்லி இரத்தப் பொருட்களை எப்படி உள்ளே இழுத்துக் கொள்கிறது! இங்கேதான் நெப்ரான் என் கிற சூப்பர் ஸ்டாரின் வேலை ஆரம்பிக் கிறது. நெப்ரான் பராக்! நெப்ரான் பராக்!

**(இன்னும் பேசுவோம்)**

டில்லிச் சூழலின் பாதிப்பு தமிழகத்திலும், அரசியல் மாற்றங்களை உருவாக்குமா என் பதுதான் தமிழக அரசியல் வட்டாரங்களில் இப்போதைய பரபரப்பான பேச்சு. அமெரிக்காவுடனான அணுசக்தி ஒப்பந்தம் காரணமாக இடது சாரிகளின் ஒத்துழைப்பு மத்திய அரசுக்குக் கேள்விக்குறியாகிவிட்ட நிலையில், இங்கும் பரபரப்பு! மேலும், இங்கே பா.ம.க, கம்யூனிஸ்ட் இயக்கங்கள் தி.மு.க.வுடன் உரசிக்கொண்டு நிற்கும் தற்போதய நிலையில் தமிழக அரசின் நிலையும் ஊசலாட்டதுக்கு வந்துவிடுமோ என்று ஆளும்கட்சியில் பேச்சு அடிபடத் துவங்கி விட்டது.

2006 சட்டமன்றத் தேர்தலில் வலுவான கூட்டணியோடு



# திண்டாட்டத்தில் தமிழக அரசு!



132 இடங்களில் போட்டியிட்ட தி.மு.க., 96 இடங்களில் வென்று, 88 லட்சம் வோட்டுக்களைப் பெற்றது. அதேதேர்தலில் அ.தி.மு.க 188 இடங்களில் போட்டியிட்டு 61 இடங்களில் வென்றது. ஆனால், அது பெற்ற வாக்குகளோ ஒரு கோடியே எட்டு லட்சம். மெஜாரிட்டிக்கு 22 இடங்கள் குறைந்த தி.மு.க.வை, ஆரம்பம் முதல் கொண்டே மைனாரிட்டி அரசு என்று சொல்லி வருகிறார் ஜெயலலிதா. இந்தச் சூழலில் தி.மு.க. கூட்டணிக் கண்ணாடியில் விரிசல் விட்டிருப்பதும், மத்தியில் இடதுசாரிகள் காங்கிரஸ் கூட்டணி ஆட்சிக்குச் சவால் விட்டிருப்பதும், ஜெயலலிதாவுக்கு நம்பிக்கையை ஏற்படுத்தியிருப்பதாக அ.தி.மு.க. வட்டாரங்கள் சொல்கின்றன.

2006 சட்டமன்றத் தேர்தலுக்குப் பிறகு மூன்று, நான்கு மாதங்கள் சுமுகமாக இருந்து வந்த தி.மு.க. கூட்டணிக் கட்சிகளின் உறவு, உள்ளாட்சித் தேர்தலில் பல அக்கினிப் பரிசோதனைகளைச் சந்தித்தது. குறிப்பாகக் கம்யூனிஸ்ட் இயக்கங்கள், தி.மு.க.வுடன் கூட்டணி வைத்துக்கொள்ளாத நிலையில், ஆளும் கட்சியினரால் அரங்கேற்றப்பட்ட வன்முறைகள், அவர்களை மிகவும் ஆத்திரத்துக்குள்ளாக்கியன. அதேசமயம், விமான நிலைய விரிவாக்கம், சிறப்புப் பொருளாதார மண்டலம், கூட்டுறவுத் தேர்தல், மணல்கொள்ளை, சுயநிதி கல்லூரிகளில்

வசூலிக்கப்படும் அதிக கட்டணம் ஆகியவை குறித்த ராமதாஸின் நிலைப்பாடும், அறிக்கைகளும் ஆளும்கட்சியினரை எரிச்சலடைய வைத்தன. போதாக் குறைக்கு, அதற்கு மேலும் எண்ணெய் ஊற்றுவது போல் வந்தது டைட்டானியம் தொழிற்சாலை விவகாரம்.

இது ஒரு பக்கம் இருக்க, கருணாநிதி எதிர்காலத்தை மனத்தில்கொண்டு கூட்டணிக் கட்சியினருடன் சுமுக உறவில் நீடிக்கும் வகையில் நடவடிக்கைகள் எடுத்தாலும், ஆளும்கட்சியின் அமைச்சர்கள், கூட்டணிக் கட்சியினரை மாவட்டங்களில் சிறிதும் மதிக்காமல், செயல்பட்டது, கீழ் மட்டங்களில் உள்ள கூட்டணிக் கட்சிக்காரர்களுக்குக் கடும் கோபத்தை உண்டாக்கியிருக்கிறது. குறிப்பாகச் சொல்லப்போனால், சேலத்தில் கூட்டுறவுத் தேர்தலையொட்டி நடந்த மோதலில் பா.ம.க.வினர் ரத்தம் சிந்தும் நிலை ஏற்பட்டது. விழுப்புரம் மாவட்டத்திலோ பொன்முடி மிகவும் எதேச்சதிகாரமாக நடந்துகொள்வதாக, பா.ம.க.வினர் புகார் பட்டியல் வாசிக்கிறார்கள். பொன்முடிக்கும், பா.ம.க.வும் பல ஆண்டுகளாக இருக்கும் விரோத மனப்பான்மை தொடர்ந்துகொண்டுதான் இருக்கிறது. மாவட்டங்களிலிருந்து வந்து பா.ம.க. மற்றும் கம்யூனிஸ்ட் தலைவர்களைப் பார்க்கும் பிரமுகர்கள் உள்ளூரில் தி.மு.க.வினர் தங்களை எப்படி உதாசீனப்படுத்துகிறார்கள் என்பதைப் பட்டியலிட்டுக் காண்பிக்கிறார்கள். அ.தி.மு.க.வுடன் கூட்டணி வைத்தால் ஜெயலலிதாதான் உதாசீன கண்ணோட்டத்தோடு நடந்துகொள்வார். கூட்டணி விஷயத்தில் கலைஞர் அப்படியில்ல என்பது ஏற்கப்படும் கருத்து. ஆனால், தி.மு.க.வின் அமைச்சர்களும், நிர்வாகிகளும், கூட்டணி கட்சிளை உதாசீனப்படுத்தும் வேலையில் இறங்கியிருக்கின்றனர்.

கூட்டணிக் கட்சிக்காரர்களின் விரோதத்தை சம்பாதித்துக்கொள்ள விருப்பமில்லாமல்தான் கூட்டுறவுத் தேர்தலையே ரத்துச் செய்தார் கருணாநிதி. துணை நகரம் விஷயத்தில் பா.ம.க.வின் கோரிக்கைக்குச் செவிசாய்த்தார். ஆனால், உச்சகட்டமாக சோழிங்கநல்லூர் நில விவகாரத்தில் ராமதாஸ் பேசியதில் எரிச்சலடைந்து, ''யோசித்து முடிவெடுக்கும் காலம் நெருங்கிவிட்டது'' என்று சிவப்புக் கொடியைக் காண்பித்து விட்டார். ''கருணாநிதியின் கருத்து என்னைப் பாதித்துவிட்டது'' என்று அறிக்கைவிட்ட ராமதாஸ், தம் நிலையை மேலும் கடுமையாக்கிக் கொண்டார். அதேசமயம் தா.பாண்டியன், ''எங்கள் கொள்கைகளுக்கு ஏற்ப அரசின் திட்டங்களை



**தி.மு.க. தனித்து ஆட்சிக்கு வந்தது போல் நடந்து கொள்கிறது: இது சரியல்ல என்று வெளிப்படையாகவே பேசுகிறார்கள் கூட்டணியினர்.**

ஆதரிப்பதும் எதிர்ப்பதும் தொடரும். மற்றபடி யாரும் எங்களைக் கட்டுப் படுத்த முடியாது'' என்றும் சொல்லி யிருக்கிறார். நிலமில்லாதவர்களுக்கு நிலப்பட்டா வழங்க வேண்டுமென்ற கோரிக்கையில் கருணாநிதியின் வேண்டுகோளையும் மீறி போராட்டத் தில் இறங்கினார்கள், இடது கம்யூனிஸ்ட் கட்சியினர். தமிழக காங்கிரஸ் கட்சியின் பதினைந்து சட்டமன்ற உறுப்பினர்கள் மக்கள் பிரச்னைகளில் கருத்தை எடுத்து வைக்கவேண்டும் என்று ஆவேசத்துடன் இருக்கிறார்கள். குறைந்த பட்சம் காங் கிரஸ் கட்சியின் ஆதரவு இருந்தால்தான் ஆட்சித் தேரை நடத்த முடியும். எனவே, அவர்களைக் குஷிப்படுத்தும் விதத்தில் ராஜீவ் பிறந்த நாளின்போது சத்திய மூர்த்தி பவனுக்கும் சென்று வந்திருக் கிறார் கருணாநிதி. ஆனால், தமிழக காங்கிரஸில் எப்போது புரட்சி வெடிக் கும் என்பதை யாராலும் ஊகிக்க முடி யாது. உதாரணம்: தமிழ் மாநில காங் கிரஸ். இருப்பினும் கூட்டணி உறவில் சோனியா உறுதியாக இருப்பது கருணா நிதிக்கு சிறு ஆறுதல்தான். ஆனால், கொடுத்த வாக்குறுதிகளை படிப்படியாக நிறைவேற்றி வருகிறார் கருணாநிதி.

கருணாநிதி இன்னமும் கொஞ்சம் கூட்டணி கட்சிகளை அனுசரித்துப் போனால் எந்தப் பிரச்னையுமின்றி அவர்களைச் சமாளிக்கலாம். குறிப்பாக, கூட்டணிக் கட்சிகளின் ஒருங்கிணைப்புக் கமிட்டி போட்டு, அவ்வப்போது கூடி பேசி, அவர்களது கருத்தையும் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டும் என்பதே கூட்டணிக் கட்சிக்காரர்களின் எண்ண ஓட்டம். ''தி.மு.க. தனித்து ஆட்சிக்கு வந்தது போல் நடந்து கொள்கிறது; இது சரியல்ல'' என்று வெளிப்படையாகவே பேசுகிறார்கள் கூட்டணியினர். இதுதவிர அரசு திட்டங்களை அறிமுகப்படுத்தும் போதும், மற்றும் வேறு நிகழ்ச்சிகளிலும் கூட்டணி தலைவர்களையும் பங்கேற்கச் செய்ய வேண்டும். தி.மு.க.வின் செயல்பாடு கள் இப்படி மாறுமேயானால், மத்திய அரசின் நிலையில் எந்தமாறுதல் வந்தாலும் தமிழக அரசு பிரச்னையின்றித் தொடரும். இல்லையேல் ஊசலாட்டம் தவிர்க்க முடி யாததாகிவிடும்.

- ப்ரியன்



## அப்பா வழியில்...

''உலகம் முழுவதுமுள்ள அப்பா ரசிகர்களின் எதிர்பார்ப்பைப் பூர்த்திச் செய்து, அவரின் இன்னொரு பரி மாணத்தை வெளிப்படுத்தும் உன்னத முயற்சி இது'' என்கிறார் சௌந்தர்யா. ரஜினி காந்தின் அனிமேஷன் படமான 'சுல்தான்' படத்தின் இயக்குநர். 'அப்பா இயக்குவதற்கு முன்னோடியாகத்தான் சுல்தானா?' என்றால் மெலிதாகச் சிரித்துவிட்டுத் தொடர்கிறார்.

''அனில் அம்பானியுடன் இணைந்து எங்களது ஆக்சன் ஸ்டுடியோஸ் சுல் தானைத் தயாரிக்கிறது. இந்தியாவி லேயே முதல்முறையாக ரஜினிகாந்த் இப்படத்தில் அனிமேஷனில் வருகிறார். சிவாஜியைத் தொடர்ந்து ரஜினிகாந்தின் பிரமாண்ட படமாக இது இருக்கும். தொழில்நுட்ப உதவியுடன் சிறப்பான முறையில் வரப்போகும் இப்படம் குழந்தைகள், பெரியவர்கள் என அனை வரும் ரசிக்கும் விதத்தில் இருக்கும்.''

'நேரடி தமிழ்ப் பட இயக்கம் எப் போது?' என்றால், 'நேரம் வந்துட்டிருக்கு. பார்ப்போம்' என்று அப்பா மாதிரியே நழுவுகிறார் சௌந்தர்யா!

# சி.ஐ.டி. விஷ்வா

## துப்பறியும்

# இறந்தவனைத் தேடு -5

பேப்பரில் வந்த விளம்பரத்தைப் பார்த்துவிட்டு, கிராமத்திலிருந்து சென்னை வந்த முதியவர் முனுசாமி, விஷ்வாவைச் சந்திக்கிறார்.

என் மகன் செல்வராசு...

தொகுதி எம்.எல்.ஏ.வை வேலை விஷயமா பார்த்துட்டு வர்றேன்னு சேப்பாக்கம் வந்தான்.

திரும்பவே இல்லை. போலீஸ்ல புகார் செய்யப் போனால், 'வந்துடுவான் போ பெரியவரே'னு திருப்பி அனுப்பிட்டாங்க...

பேப்பர்ல உங்க விளம்பரம் பார்த்தேன்...

போட்டோ கொண்டு வந்தீங்களா...

இதோ... போட்டோ...

காணாமல்போன அன்னைக்கு என்ன டிரஸ் போட்டிருந்தாரு?

நீல நிற சட்டை, பாண்ட்.

கையில பை வெச்சிருந்தாரா... வாட்ச், மோதிரம், செய்ன்... இப்படி ஏதாவது...

ஏழைங்க, அதுக்கெல்லாம் எங்கே போவான். மனு எழுத ரெண்டு வெள்ளை பேப்பர்தான் கொண்டு போனான்.


சட்டை கோடு போட்டதா?
பச்சையில சின்ன வெள்ளக் கோடு...
செருப்பு?
ரப்பர் செருப்பு...


ஃபைலில் உள்ள குறிப்புகளோடு மிகவும் ஒத்துப் போகுதே...


பெரியவரே, செல்வராஜுக்குக் கல்யாணம் ஆயிட்டுதா...


வேலை கிடைச்சாதான் கல்யாணம்னு பிடிவாதமாய் இருந்தான். நாற்பது வயசாச்சுங்க.
இந்த வயசுல அவனுக்குக் கண்டம்னு ஜோசியர் சொன்னாரு. எங்கும் போகாதேன்னேன்... கேட்கலை....


போய்ட்டு வாங்க பெரியவரே... முயற்சி பண்றோம்.


மகன் இறந்துவிட்டான் என்றால் தாங்குவாரா அவர்...


அதேநேரம்-
சென்னையை ஒட்டிய தொழிற்பேட்டைக்குள், ஆந்திரப் பதிவு எண்ணோடு ஒரு லாரி நுழைந்தது...
(தொடரும்)

# ஆடிக் கொள்ளை!

ஆடி பிறந்து விட்டால் போதும் ஆத்தா பெயரைச் சொல்லிக்கொண்டு கொள்ளையடிக்கக் கிளம்பிவிடுகிறார்கள். நாளுக்கு நாள் இப்பிரச்னை அதிகரித்துக் கொண்டே வருகிறது. ஆடித் திருவிழா நடத்துகிறோம் என்கிற பெயரில் ஆயிரக்கணக்கில், லட்சக்கணக்கில் கட்டாய நன்கொடை வசூலித்து, அதில் கணிசமான பணத்தை ஒதுக்கிக் கொள்ளும் போக்கைத் தட்டிக்கேட்க ஆளில்லை!

ஆடி மாதம் பிறப்பதற்கு சில நாட்களுக்கு முன்னரே, அம்மன் கோயில்காரர்கள் திருவிழா நோட்டீசும் புத்தகமுமாக கலெக்‌ஷனுக்கு வீதி உலா புறப்பட்டு விடுகிறார்கள். இதற்குப் பெரும்பாலும் கணக்கு வழக்கு ஒன்றும் கிடையாது. இந்த மிரட்டல், வசூல் ஆடி முடிந்து வினாயகர் சதுர்த்தி வரையில்கூட தொடர்கிறது.

ஏரியாவே அதிரும்படி லவுட் ஸ்பீக்கரை அலறவிட்டு, படிக்கும் மாணவர்கள், நோயாளிகள், வயதானவர்கள் யாரைப் பற்றியும் துளியும் அக்கறை இன்றி நடந்து கொள்வது சகஜமாக இருக்கிறது. ஒருநாள் விடியற்காலை நான்கு மணிக்கு லவுட் ஸ்பீக்கர் அலறிய அம்மன் கோயிலுக்குள் சென்றபோது ஈ, காக்காய்கூட கிடையாது! சவுண்டு சர்வீஸ்காரர், அதிகாலை கோயிலுக்கு வந்து மாரியம்மன் பாட்டு சி.டி.யைப் போட்டுவிட்டு, வீட்டுக்குப் போய் விடுவார் என்பது பின்னர் தெரியவந்தது!

ஒரே ஏரியாவில் ஒன்றுக்கு மேற்பட்ட அம்மன் கோயில்கள் இருந்தால், கேட்கவே வேண்டாம்... கலெக்‌ஷன், நிகழ்ச்சி ஏற்பாடு, செலவு என எல்லாவற்றிலும் போட்டா போட்டிதான். திருவிழாவின் போது தெரு முழுவதும் மின்சார விளக்கு, அலங்கார விளக்குகளுக்கு, பைசா செலவு இல்லாமல் தெருவில் போகும் பொது மின்சார லைனிலிருந்து அப்படியே வேண்டிய பவரை வளைத்துக் கொள்ள வேண்டியதுதான்.



திருவிழாக்களில் இசை நிகழ்ச்சி என்கிற பெயரில் பக்திக்கு சம்பந்தமில்லாத ஆபாச நடனம் ஆடும் ஜுரம், பரவி வருகிறது. இந்த ஆடி சீசனில், அம்மன் ஜுரத்தில் காசு பார்க்கும் நோக்கத்துடன் புதிது புதிதாக அம்மன் பாட்டு கேசட்டுகள் வெளியிடும் கேசட் கம்பெனிகளும் முளைக்கின்றன. சில சமயம் கேசட் பெயரையும், இன்லே கார்டில் அம்மன் படத்தையும் மாற்றி அச்சிட்டு, பழைய கேசட்டையே புது கெட்அப்பில் வெளியிட்டு ஏமாற்றுவதும் நடக்கிறது!

எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டிருக்கிற ஆத்தா கண் திறக்கட்டும்!

– அர்ஜுன்

**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்வான கதை**

“அடி பாப்பாத்தி. ஓடியாடி உம்மவன பாம்புத் தீண்டிடுச்சி.''

அந்தி வேளையில், கலைந்த தலையும், புடைவையுமாக ஓடிவருகிறாள் வெள்ளைச் சீலைக்காரி.

திருவண்ணாமலை அங்காடியில் பூ யாவாரம் சூடுபிடிக்கும் வேளை. வரிசையாகப் பூக்கடைகள், பாப்பாத்தி, செவ்வந்தி, வெங்கம்மா, காளி, மருதாயி, சுப்பம்மா, வேப்பிலையாத்தா... எல்லோரும் தத்தம் கடைகளைவிட்டு ஓடி வருகிறார்கள்.

''என்ட ராசாவே, எங்கே டீ பாம்பு தீண்டுச்சு. எப்போ ஆச்சு? இப்பத்தானே எனக்குக் கடை பரத்திட்டு ஓடிப்போனான். நான் என்னடீ பாவம் பண்ணினேன்.''

பாப்பாத்தி பேய் அறைந்தவள் போல பதறி, அலறி ஓடுகிறாள்.

அவளுடன் எல்லோரும் நந்தவனத்தை நோக்கி ஓடுகிறார்கள்.

வேலாண்டி மலங்கமலங்க விழித்துக் கொண்டு, சரஸக்கா தோளில் சாய்ந்து உட்கார்ந்திருக்கிறான்.

கணுக்காலுக்கு மேல், முழங்கால், தொடை எல்லா இடங்களிலும் இறுகக் கட்டிய கிழிசல் துணி.

''பாவி மகனே... எங்கேடா போனே ராசா. எப்படிடா பாம்பு கடிச்சது? பாம்புதானா, ரொம்ப வலிக்குதா, கடுப்பாக இருக்குதா...?''

மகன் தலையைக் கோதியவாறு அவன் காலைப் பார்க்கிறாள் பாப்பாத்தி.

''பாம்புதாம்மா. ஆடுசதையிலே சுருக்குனு குத்திச்சா. காலை இழுத்தா பாம்பு ஓடுது.''

''மிதிச்சிட்டியா? ஒண்ணா, ரெண்டு பாம்பு சுத்திகிட்டுக் கிடந்ததா?''

''ஒரு பாம்புதாம்மா; மிதிச்சேம்போல தான் தோணுது. கால மண்மேட்டுல மேலே வைக்கிற நாழிக்கு சுருக்குனு வலிச்சது.''

கண்ணில் நீர் வழிய வேலாண்டி பயந்து கிடக்கிறான்.

அம்மணியக்கா எங்க போனாங்க?

"அவங்கதான் இவனைத் தூக்கி வந்தாங்க. பல்பட்ட இடத்



# பாம்பு

தில் சுத்தம் பண்ணிச் சுண்ணாம்பு வெச்சாங்க.

வைத்தியர் நம்பூதிரியோடு வந்தாள் அம்மணியக்கா.

"அம்மணியக்கா, பாம்புக் கடிச்சு ரெண்டு மணிக்கூறு ஆகிடிச்சு. விஷம் ஏற ஆரம்பிச்சாச்சு. வேகமாக கவர்மெண்ட் ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போங்க."- நம்பூதிரி கைவிரித்தார்.

பதினைந்து வயது வேலாண்டியைத் தோளில் போட்டுக் கொண்டு வேகுவே கென்று ஆஸ்பத்திரியை நோக்கி நடக்கிறாள்.

புடைசூழ எல்லாப் பெண்களும் ஓடி வருகிறார்கள்.

**ஆ**ஸ்பத்திரியின் அவசர சிகிச்சைப் பகுதி. கிங்கரனாக நிற்கும் ஸ்ட்ரெச்சர் பாய் முனியாண்டியும், காவல் காக்கும் கணேசும் அரட்டையில் இருக்கிறார்கள்.

"பையனைப் பாம்புக் கடிச்சிடுச்சி. அவசரமா ஊசி போடுணும்பா."

"தம்பிகளா, மவராசனா இருப்பீங்க. கொஞ்சம் உள்ளே கொண்டு போங்க. பையனுக்கு விஷம் ஏறிக்கிச்சு." சுப்பக்காவும், நடுமாத்தாவும் சுருக்குப் பையைத் துழாவி, அவர்கள் கையில் கொஞ்சம் கொடுத்துக் கைகூப்பித் தொழுகிறார்கள்.

அரைமணி நேரத்தில் வேலாண்டி உள்ளே அனுமதிக்கப்பட்டான். வெளியே பெண்கள் கூட்டம் ஒப்பாரி வைக்கிறது.

"ஏய், இங்கே கூட்டம் போடாதீங்க. பையன் முழிச்சுக்கிட்டு சுயநினைப்போடு உள்ள போயிருக்கிறான்." அவர்களை கணேசு வெளியே விரட்டினான்.

இரவு எட்டு மணி. உள்ளே போக விடாமல் வெளியே இவர்களைத் துரத்தின கணேசு, டாக்டர் கூப்பிடுவதாகவும், கூட்டம் போடாமல் பாப்பாத்தியை மாத்திரம் உள்ளே போகச் சொல்லி அழைத்துப் போனான்.

இளம் டாக்டர்கள் நாலுபேர் சூழ, வேலாண்டி படுக்கையில் இருக்கிறான். "அம்மா பையனுக்கு உடம்பில் விஷம் ஏறிடுச்சி. நாங்கள் விஷ முறிவு ஊசி போட்டிருக்கிறோம். உடனே பாண்டிச்சேரி ஜிப்மர் ஆஸ்பிட்டலுக்கு அழைச்சுட்டுப் போங்க."

"ஐயா, உங்களால வைத்தியம் பண்ண முடியாதுங்களா?" கேவலூடே கேட்டாள், பாப்பாத்தி.

"அம்மா, பையனுக்குச் சிறுநீரகம் வேலை செய்யறது நின்னுட்டுது. அத சரி பண்றதுக்கு அங்கதான் வைத்தியம் இருக்கு. உடனே போகணும்மா."

"ஐயோ, சாமி நான் இவனை எப்படி அம்மாந்தூரம் கூட்டிப்போவேன். அவனுக்குப் பஸ்லே உக்காரக்கூட முடியா

விஜயா ராஜ்



இந்த மருத்துவருக்கு மன்னரிடம் செல்வாக்கு அதிக

ராஜி ராதா, திருச்சி

துங்களே. காப்பாத்துங்க சாமி'' பெருங்குரலெடுத்துப் பாப்பாதி அழுதாள்.

''அழுகையை நிறுத்தும்மா. ஆஸ்பத்திரி வண்டில கூட்டிப் போறோம். கூட நீ மாத்திரம் வண்டில ஏறு.''

''அடியே பாப்பாத்தி இடுப்புல எதுனாச்சும் வைச்சிருக்கியா, இல்லையா?'' கூட வந்த பெண்கள் சூழ்கிறார்கள்.

லச்சுமி தேய்ந்துபோன தன் கைக்காப்பைக் கழற்றி அவளிடம் கொடுத்தாள்.

ஒவ்வொருவராகச் சுருக்குப் பையைத் திறந்த கொட்டி எண்ணி மொத்தமாகக் கையில் ஐந்நூறு ரூபாய்க் கொடுத்து பாப்பாத்தியை வழி அனுப்பினார்கள்.

''புள்ளையோட அப்பா வரலையா?'' கூட வந்த டாக்டர் கேட்டார்.

''அந்தக் கூறுகெட்டவன் அந்தச் சிறுக்கியோட குடித்தனம் போட்டிருக்கான்.''

இரவு பத்து மணிக்கு ஆம்புலன்ஸ் ஜிப்மர் அவசர சிகிச்சைப் பகுதியில் நிற்கிறது. சிக்கல் எதுவும் இல்லாமல் வேலாண்டி உள்ளே எடுத்துச் செல்லப்பட்டான்.

''ஆத்தா, உள்ளே உட்காரக் கூடாது. கேட்டுக்கு வெளியே போ.'' காவலாளி அவளை வெளியே துரத்த, வெளியே நோயாளிகளுடன் வந்தவர்களும், சாலையில் வரிசையாகத் துணியை விரித்துப் படுத்திருப்பவர்களும், பேசிக் கொண்டு கவலையாக இருப்பவர்களுமாகக் கூட்டமாக இருக்கிறது.

''என் மவன் பிழைப்பானா?'' அவனுக்காகத்தான் அவள் ஜீவனமே ஓடுது.

விடிந்து ஆஸ்பத்திரி சுறுசுறுப்பானது. வாசலில் ஜனநெரிசல்.

அவசர சிகிச்சைப் பகுதியில் இரவு பார்த்த அதே காவலாளி டூட்டி முடிந்து கிளம்பிக்கொண்டிருக்கிறான்.

''தம்பி, மகனைப் பார்க்க முடியுமா? பிழைச்சுடுவானா? எந்த இடம் தம்பி? கொஞ்சம் வழி காட்டறியா?''

பலபேர் வேகமாகப் போகும் ஒரு வழியில் நுழைந்து பெரிய ஹாலில் நோயாளிகள் படுத்திருக்கும் கட்டில்கள் நிறைந்த இடத்துக்கு அழைத்துச் செல்கிறான். அங்கே ஒரு கட்டிலில் மகன் கண்மூடிக் கிழிந்த நாராகக் கிடந்தான்.

''இப்ப இங்கே யாரும் வரவோ, உக்காரவோ கூடாது. வெளியே போயிடு.''

வார்டு பாய் அவளை வெளியே அழைத்து வருகிறான்.

''பிழைச்சுக்குவானா? ஏதானும் சாப்பிட்டானா? பேசினானா?''

''ஆத்தா, உம்மவன் பிழைச்சுடுவான். கவலைப் படாதே. எம்பேரு முத்து. நைட் டூட்டி பார்க்கறேன். பகல் டூட்டிக்கு மயில்சாமி வந்திட்டான். அவன் உனக்கு உதவி செய்வான்.''

''ஆத்தாளைப் பார்த்துக்க மயிலு. திருவண்ணாமலை டாக்டர் கூட்டி வந்திருக்காரு. உள்ளே போக ஓர் அனுமதிச் சீட்டுப் பண்ணிக்கொடு.''

இவன் புறப்பட்டுப் போக, மயிலு பொறுப்பேற்றுக் கொள்ளுகிறான்.

பெரிய டாக்டர் வந்துவிட்டார். அவரைச் சுற்றி பல இளம் டாக்டர்கள். நாடி பிடித்து, நெஞ்சுக் கூட்டை, குழாய் வைச்சு சோதனை எல்லாம் நடத்தி

னாரு.

''மகன் பிழைச்சுக்குவானா டாக்டரய்யா?''

அவர் காலைக் கும்பிடப் போகும் அவளிடம் கனிவாக டாக்டர் பேசுகிறார்.

''பையனோடு உடம்பில பாம்பு விஷம் ஏறிடுச்சு. அவனோட மூத்திரக்காய் வேலை செய்யல்ல. அதுக்காக மெஷின் போட்டுச் சிகிச்சைக் கொடுத்தா ஒரு வாரம் பத்த நாள்ல சரியாயிடும்மா.''

டாக்டர் போன சிறிது நேரத்தில் ஒரு நர்ஸ் இவளிடம் கைநாட்டு வாங்கினாள்.

''இது என்னத்துக்கு? எனக்கு எழுதப்படிக்கத் தெரியாதுங்க.''

''மெஷின் போடறதுக்குக் கழுத்தில ஆபரேஷன் பண்ணுவாங்க. உனக்குச் சம்மதம்னு கைநாட்டுப் போடணும்.'' அதற்குள் வேலாண்டியைக் கூட்டிப் போக ஸ்ட்ரெச்சர் வந்துவிட, இவள் மனதில்லாமல் கைநாட்டுப் போடுகிறாள்.

''பையனை எங்கனயோ கூட்டிப் போறாங்களே தம்பி. கழுத்திலே கத்தி போடப் போறாங்களாம். கைநாட்டு வாங்கினாங்க.''

''பயப்படாத ஆத்தா. அவனோட சிறுநீரகம் பழுதாயிடுச்சு. அதுக்கு 'டயாலிஸிஸ்'னு மெஷின் போடுவாங்க. ஒரு வாரத்தில விஷம் முறிஞ்சு பையன் சரியாகிடுவான்.''

''அப்பன்னா இன்னும் ஒரு வாரத்துக்கு உயிர்க்கு ஆபத்து தானா தம்பி?''

''தெய்வத்துக்குதான் தெரியும் ஆத்தா நீ போய் எதுனா சாப்பிட்டுட்டு வா.''

ஐந்து நாட்கள் ஓடிவிட்டன. பகல் முழுதும் பையன் கட்டில் அருகிலேயே முடங்கிக் கிடக்கிறாள். ஒவ்வொரு வேளையும் பல டாக்டர்கள் வருகிறார்கள். கட்டிலுக்குப் பின் தொங்கும் அட்டையில் உள்ள காகிதங்களைப் படிப்பதும், தங்களுக்குள் பேசிக் கொள்ளுவதுமாகக் கலைந்து போகிறார்கள். இரண்டுவாட்டி மெஷின் போட்டுவிட்டார்கள். கழுத்தில் ஒரு பிளாஸ்த்ரி.

சாயந்திரம் வந்து பார்த்துப் பேசி விட்டுப் போக மாத்திரம் தான் அனுமதி. மீதி நேரங்களில் ஆஸ்பத்திரியின் உள்ளேயும் வெளியிலும், மரத்தடியிலும், வெளியே சாலையை வேடிக்கை பார்ப்பதுமாகப் பொழுது ஓடுகிறது. ஊரில் பூக்கடை என்னவாச்சோ? அம்மணியக்கா ரொம்ப தெகிரிய சாலி. ஒரு நடை பாண்டி வந்து பையனைப் பார்த்துவிட்டுப் போனா நல்லா இருக்கும்.

## ரீடர்ஸ் கார்னர்

கலைவாணர் என்.எஸ்.கிருஷ்ணன் நோய் வாய்ப்பட்டு சென்னை பெரிய மருத்துவமனையில் மரணத்துடன் போராடிக் கொண்டிருந்த நேரம். அவர் மனைவி டி.ஏ.மதுரம் அருகில் இருந்து கவனித்துக் கொண்டிருந்தார். அப்போது மருத்துவமனை காவலையும் மீறி ஒரு ரசிகர், உள்ளே ஓடி வந்தார்.



வந்தவர், ''அண்ணே! நீங்க இறந்து போயிட்டுதா வெளியே செய்தி பரப்பிட்டாங்க. தாங்க முடியலண்ணே. அதான் ஓடி வந்தேன்!'' என்று சொன்னார். மறுநாள் சேலத்தைச் சேர்ந்த ஒரு பட முதலாளி வந்து ஐயா! நீங்க காலமாகிவிட்டதாகச் சேலத்திலே ஒரே பரபரப்பாகி தியேட்டர்களில் எல்லாம் கறுப்புக்கொடிக் கட்டி நேற்று ஆட்டத்தையே நிறுத்திப் புட்டாங்க'' என்று கூறினார் அவருக்குத் தைரியம் சொல்லி அனுப்பிவிட்டு மதுரத்திடம் கூறினார்: ''நான் சாகலேன்னா இவங்க விடமாட்டாங்க போல இருக்கே! இவங்க திருப்திக்காகவாவது ஒரு தரம் நான் அவசியம் சாகணும்'' என்று சிரித்துக்கொண்டே கூறினார். மறுநாள் அந்தச் சிரிப்பை இயற்கை எடுத்துக் கொண்டது.

- பி.கோவிந்தசாமி

## ரீடர்ஸ் கார்னர்

"இன்போசிஸ் நிறுவனத்தைத் தொடங்குவதற்கு ஏழு ஆண்டுகளுக்கு முன், தனிப்பட்ட அலுவல் காரணமாக பிரான்ஸ், பல்கேரியா ஆகிய நாடுகளுக்குச் சென்றேன். அங்கு ரயிலில் பயணம் செய்யும் பொழுது எதிரே இருந்த பிரெஞ்ச் தெரிந்த பெண்மணியிடம் பேசினேன். அதைப் பார்த்த பிரெஞ்சு தெரியாத, அருகில் இருந்த இளைஞன் போலீஸை அழைத்துப் புகார் கொடுத்ததால் மூன்று நாட்கள் சிறையில் அடைத்து, பின்னர் விடுதலை செய்தனர்! விடுதலை செய்த நாளில் வங்கிகள் இல்லாததால் பணம் மாற்ற முடியாமல் ரயில்வே பிளாட்பாரத்தில் பட்டினி கிடந்தேன். அந்த அவலமான சோதனையின் பொழுது நான் சொந்தமாகத் தொழில் தொடங்க வேண்டும்; சமூகம் ஆண் - பெண் உறவை நட்பாய் பழகுவதை இயல்பாக ஏற்றுக் கொள்ளும் சூழலை என் நிறுவனத்தில் நிலவச் செய்ய வேண்டும் என நினைத்தேன்.



-மதுரை தியாகராஜா நிர்வாகப்பள்ளி மாணவர்களிடம் உரையாடும்பொழுது இதனை நாராயண மூர்த்தி தெரிவித்தார்.

- ந.நந்தினி மாசிலாமணி

ஆசுபத்திரியையொட்டி வீதியோரத்தில் உள்ள புற்று அம்மனுக்குக் கற்பூரம் வாங்கிக் கொளுத்தி வேண்டிக்கொள்ளுகிறாள்.

திருவண்ணாமலைக்கு அவள் எப்பத் திரும்ப முடியும்? பிள்ளைக்குப் பொங்கிப்போட்டு, பள்ளிக்கூடம் அனுப்பி, மாலையில் பூவிற்று, குடிசைக்குத் திரும்பு முன்பு கோயிலுக்குச் சென்று சாமி கும்பிட்டு எவ்வளவு இன்பமாக வாழ்ந்தாள்.

இரவு பத்துமணி. ஒரு பெண்மணி தலைவிரி கோலமாக அழுதுகொண்டு வர அவளைத் தாங்கிப் பிடித்தவாறு அந்த இளைஞன். ஆஸ்பத்திரி நாலாம் கேட்டைத் தாண்டி டாக்ஸி அருகில் வருகிறார்கள்.

"வண்டி கடலூர் போகுமாப்பா?" இளைஞன்.

"எவ்வளவு சவாரி? நீங்க இரண்டு பேருமா, கூட ஆள் இருக்காங்களா?"

நாங்க இரண்டு பேரும் அப்பா சடலத்தை எடுத்துட்டுப் போகணும். விம்மலை அடக்கியவாறு இளைஞனுடைய பதில்.

"இரண்டாயிரம் ரேட்டுங்க."

"என்னப்பா இது. நியாயமாகச் சொல்லுப்பா. காலடியிலேதானே கடலூர். இவ்வளவு கேட்கறியே."

"போய்யா, சாவுக் கிராக்கி, கடலூர் காலடியிலே கிடந்தா சவத்தை நடத்திக் கூட்டிப் போயேன்."

அந்த அம்மாள் இவன் வார்த்தைகளைக் கேட்டு ஓவென்று அழுது தன் நிலைதடுமாறுகிறாள்.

பாப்பாத்தி ஓடிச்சென்று அவளைத் தாங்கிக்கொண்டு டாக்ஸி டிரைவரைப் பார்த்துக் கத்துகிறாள்.

"உன்னைப் பெத்த அப்பன் உயிரோடு இருந்தா இப்படிப் பேச மாட்டே. மனுஷனா நீ?"

"ஏய்... போக்கத்தவளே. யாருடி நீ வக்காலத்தா...?"

அங்கே நிற்கும் டாக்ஸி எல்லாமே சாவுக்கிராக்கி வண்டிகள்தான். கடலூர் ரேட்டு இரண்டாயிரம்தான்.

**வேலாண்டி உயிர் போயிட்டா அவனைத் தூக்கிட்டுப் போக என்னிடம் காசு இல்லை! என்றாள் பாப்பாத்தி.**



பாப்பாத்தி பொறி கலங்கிப் போய்ப் பார்த்துக் கொண்டிருக்கையிலேயே ஸ்ட்ரெச்சரில் முகத்தை மூடி வரும் சவத்தைக் காரில் ஏற்றிக்கொண்டு அவர்கள் கிளம்பிப் போகிறார்கள்.

பாப்பாத்தி அவசர சிகிச்சைப் பகுதிக்கு ஓடி வருகிறாள்.

''ஆத்தா? என்ன ஆச்சு?'' முத்து பதற்றமாகக் கேட்கிறான்.

''முத்து, வேலாண்டி கண்டிப்பா பிழைச்சிடுவானா? அவன் மூத்திரக் காயிலிருந்து விஷத்தை எடுத்திட்டாங்களா?

''தெரியலையே ஆத்தா. டயாலிஸிஸ் கொடுக்கறாங்க. பத்துநாளில் நல்லாயிடுவான்.''

''நான் உன்னைக் கையெடுத்துக் கும்பிடறேன். என் மவனை உயிரோட நான் திருவண்ணாமலை கூட்டிப் போயிடறேன். அவனை வெளியே அழைச்சுகிட்டு வந்திடறயா?''

''ஐயோ ஆத்தா. அவனைத் திருட்டுத்தனமா வெளியே கூட்டிப் போயிடாதே. டாக்டர் அவன் உடம்பு சரியாப் போச்சுன்னு சொல்லிச் சீட்டுக் குடுத்து அனுப்பற வரைக்கும் அவன் ஆஸ்பத்திரியிலதான் இருக்கணும்.''

''உன்னால முடியும், தம்பி. அவனை ரகசியமா மெல்ல வெளியே இட்டாந்திரு. இருட்டோட இருட்டா நான் அவனை உயிரோட ஊருக்குக் கூட்டிப் போயிடறேன். அவன் பிராணன் போயிட்டா அவனைத் தூக்கிட்டுப் போக என்னிடம் காசும் இல்ல. கூட வர ஆளும் இல்ல. அநாதையாக இங்க சாகறதைவிட ஊர்ல நாலு சனங்க மத்தில அடிச்சு அழ ஆள் இருக்கிற இடத்தில் உசிரு போகட்டும்.''

பாப்பாத்தி துக்கம் தாளாமல் தரையில் உட்கார்ந்து அழ ஆரம்பித்தாள். ●

# அஞ்சலி



அரை நூற்றாண்டு காலம் பத்திரிகைத் துறையில் பணியாற்றி, அண்மையில் மறைந்த தினமணி நாளிதழ் முன்னாள் ஆசிரியர் இராம. சம்பந்தம் பற்றி நினைவு கூர்கிறார் அந்த நாளிதழின் கார்ட்டூனிஸ்ட் மதி.

''கடவுள் மறுப்புக் கொள்கையைப் பின்பற்றியவர் ஆசிரியர் சம்பந்தம். ஆனால், தமது கொள்கையை மற்றவர்கள்மீது ஒருபோதும் திணித்ததில்லை. ஒரு முறை ராமகிருஷ்ண மடத்துக்குச் சென்று பிரசாதம் வாங்கிச் சாப்பிட்டதுகூட உண்டு. இது குறித்து மடத்தின் சுவாமி கமலாத்மானந்தா என்னிடம், ''இவர் கடவுள் மறுப்பாளர் என்று கேள்விப்பட்டேனே!'' என்று வியந்து கூறினார்.

பத்திரிகைப் பணி என்பது சமுதாயப் பணியையும் உள்ளடக்கியதே என்னும் அவர் வேலை செய்த நாளிழின் கொள்கைக்கு ஏற்ப, ''லாபம் மட்டுமே நோக்கமில்லை; சமுதாயம் பயன் பெற வேண்டும்'' என்ற நோக்கத்துடன் என்றென்றும் பாதுகாக்க வேண்டிய தகவல்களுடன் மருத்துவ மலர், மாணவர் மலர் ஆகியவற்றை வெளியிட்டார். பிளஸ் டூ தேர்வில் நல்ல மார்க் வாங்கித் தேர்ச்சிப் பெற்றும் மேலே படிக்க வசதி இல்லாமல் கலங்கி நின்ற மாணவர்கள் பற்றிய செய்திகளை தினமணியின் முதல் பக்கத்தில் வெளியிட்டு, அவர்களுக்குப் போதிய அளவுக்கு மேலேயே நிதி உதவி கிடைக்க செய்து, பொறியாளர்களாகவும், மருத்துவர்களாகவும் உயர உதவினார்.



# ஆயிரத்தில்

'வல்லவன்' வருத்தங்களால் தமிழ் சினிமாவுக்கு இடைநேர ஓய்வு கொடுத்திருந்தார் ரீமாசென். ரணங்கள் ஆறிவிட்ட நிலையில் தற்போது செல்வராகவன் - கார்த்தி கூட்டணியில் உருவாகும் ஆயிரத்தில் ஒருவன் படத்தின் நாயகியாக நடிக்கவிருக்கிறார்.

**வல்லவன் அனுபவங்களை இன்னமும் நினைச்சுட்டு இருக்கீங்களா?**

வல்லவன் நான் ரொம்ப எதிர்பார்த்த ஒரு படம். என் கேரக்டரை எல்லோரும் மெச்சுவாங்கனு அடங்காத ஆர்வத்துல இருந்தேன். ஆனால், எனக்குக் கடைசியில கிடைச்சது ஏமாற்றம்தான். என் கேரக்டர்ல ரசிகர்கள் திருப்தி அடைஞ்சாலும் எனக்குத்தான் இன்னமும் மனசு ஆறலை. என் திறமையை இன்னும் நல்லா பயன்படுத்தியிருக்கலாம். ஓ.கே. ஒவ்வொரு படத்தையும் ஓர் அனுபவமா எடுத்துக்கறேன். இருபத்தி நாலு நேரமும் நடிச்சுட்டே இருக்கணும்னு துடிக்கிற நடிகை, நான் இல்லை. கிடைச்சவரைக்கும் வாய்ப்புகளை ஏத்துக்கிட்டு, பணத்தை அள்ளுற நடிகையும் கிடையாது. நான் நடிக்கிற படம் முதல்ல எனக்குப் பிடிக்கணும்.

**ஆயிரத்தில் ஒருவன்?**

செல்வராகவன் எனக்குக் ரொம்ப பிடிச்ச டைரக்டர். அவர் படத்துல நடிக்கறதால இதைச் சொல்லலை. ஏற்கெனவே பல பேட்டிகள்ல இதைச் சொல்லியிருக்கேன். கமர்ஷியல் படம் மட்டும் எடுக்கிற ஒரு சராசரி இயக்குநர் கிடையாது அவர்.

ஒவ்வொரு படத்திலேயும் ஏதாவது சாதிக்கணும்னு நினைக்கிற ஓர் இயக்குநர். ஆயிரத்துல ஒருவன்ல எனக்குச் சவாலான கேரக்டர். நிறைய வேலை வாங்கும். என் பங்குங்கு நான் நிறைய உழைக்கணும்.

**தென்னிந்தியாவுல ஒரு நட்சத்திரமா மின்னுவீங்கனு நினைச்சீங்களா?**

கனவிலேயும் நினைக்கலை. நான் தமிழ்ப் படங்கள் பார்த்தெல்லாம் வளரலை. திடீர்னு ஒரே சமயத்துல 'சித்ரம்', 'மின்னலே'ன்னு தெலுங்கு, தமிழ்ப் பட வாய்ப்புகள் வந்துச்சு. பார்த்தா ரெண்டுமே சூப்பர் டூப்பர் ஹிட்டாகி ஒரே இரவுல என்னை ஸ்டாராக்கிடுச்சு. அதுபோக நான் நடிக்கிற பெரும்பாலான தமிழ் படங்கள் ஹிட்டாயிருக்கு. ஒரு கதாநாயகிக்குத் தன் படம் ஹிட் ஆகறது எவ்வளவு முக்கியம்னு எனக்குத் தெரியும். எனக்கு அது சர்வசாதாரணமா நடந்துக்குக் கடவுளைவிட வேறு யார் காரணமா இருக்க முடியும்?

**ரசிகர்கள் எந்தளவுக்கு முக்கியம்?**

அவங்க சொல்ற விமர்சனங்கள் சரியா இருக்கும். மின்னலே வந்த புதுசுல நான் மலேஷியாவுல ஒரு தெலுங்கு பட ஷூட்ல இருந்தேன். அப்போ நான் பார்க்க பப்ளிமாஸ் மாதிரி இருப்பேன். என்னை ஏதேதோ கனவுகளோட பார்க்க வந்த ஒரு ரசிகர் கூட்டத்துக்கு, என் உருவம் அதிர்ச்சியைக் கொடுத்திருக்கு. ஏன் இப்படி இருக்கீங்கனு ஒரு பொண்ணு வாய் திறந்து கேட்கவும் செஞ்சாங்க. எனக்கு ரொம்ப தர்மசங்கடமாயிடுச்சு. அன்னைக்குத் திருந்தினவதான் நான்.

**விஷாலுடனான கிசுகிசுக்கள் பற்றி?**

சினிமாவுல இருந்தா நாலு பேர் நாலு விதமா எழுதத்தான் செய்வாங்க. இதை யாராலும் தவிர்க்கமுடியாது. இதனால எனக்குப் பெரிசா பாதிப்புகள் எதுவும் இல்லை.

**உங்க முதல் படத்துலதான் கௌதம் மேனன், ஹாரிஸ் ஜெயராஜ் எல்லாம் அறிமுகமானாங்க. அவங்க திறமையை உங்களால் கணிக்க முடிஞ்சுதா?**

கண்டிப்பா! கௌதம் என்கிட்ட மின்னலே கதையை இருபது நிமிஷம்தான் சொன்னார். அதிலேயே அவர் சினிமாவை எந்தளவுக்கு உயிரா நினைக்கிறாருன்னு நல்லா புரிஞ்சுது. நாம் புது இயக்குநர்கிட்ட பேசலை, வருங்கால பிரபல இயக்குநர் கிட்டதான் பேசிட்டு இருக்கோம்னு அப்பவே மனசுக்குள்ளே பல்பு எரிஞ்சுது. வசீகரா பாட்டு கேட்டப்போ அட யார்ப்பா இது? இசையால இவ்வளவு மேஜிக் காட்டறார்னு சத்தியமா நினைச்சேன். முதல் படமே இப்படியெல்லாம் அமையறதுக்கு நான் எவ்வளவு கொடுத்து வைக்கணும்!

– சநகன்

# ஒருத்தி!







சுதந்திரப் பொன்விழாக் கொண்டாட்டத்தின்போது வந்தேமாதரம் பாடல் மூலம் இந்தியாவின் இளைய தலைமுறையினர் இடையே நாட்டுப்பற்றையும், புத்துணர்ச்சியையும் ஏற்படுத்திய ஏ.ஆர்.ரஹ்மான் - பரத் பாலா கூட்டணி, இப்போது இந்திய சுதந்திரத்தின் அறுபதாவது ஆண்டு விழா ஸ்பெஷலாக தேசிய கீதத்துக்குப் புது வடிவம் கொடுத்திருக்கிறார்கள். அந்த அனுபவம் பற்றி நம்மோடு பேசினார்கள் பரத் பாலாவும், அவரது மனைவியும், இணை இயக்குனருமான கனிகாவும்.

''நான்கு ஆண்டுகளுக்கு முன்பு மும்பையில் ஒரு பெரிய மியூசிக் ஸ்டோர்க்குச் சென்றிருந்தேன். அங்கே ஆயிரக்கணக்கான சி.டி.க்கள் இருந்தன. ஆனால், நம் நாட்டின் தேசிய கீதத்தின் சி.டி. கிடைக்குமா என்று தேடியபோது, எனக்கு ஏமாற்றமே மிஞ்சியது. அதுதான் 'ஜன கன மன' ப்ராஜெக்டுக்குப் பொறி. நானும், பாலாவும் இதுகுறித்து ஏ.ஆர்.ரஹ்மானைக் கலந்து ஆலோசனைச் செய்தோம். ரஹ்மான் மகிழ்ச்சியுடன் ஒப்புக்கொண்டார். வந்தே மாதரத்துக்குக் கிடைத்த மாபெரும் வரவேற்புதான் எங்களுக்கு இந்தப் புதிய சவாலை ஏற்றுக்கொள்ள ஊக்கமளித்தது. இருப்பினும் தேசியகீதத்துக்கு என்று ஒரு புனிதத்துவம் இருக்கிறது. எனவே, இதில் என்ன செய்தாலும் மிகவும் சென்சிடிவாக எடுத்துக் கொள்ளுவார்கள் என்ற எச்சரிக்கை உணர்வுடன்தான் செயலில் இறங்கினோம்'' என்கிறார் கனிகா.

''முதலில் லதா மங்கேஷ்கரும், ஆஷா போன்ஸ்லேவும் தனித்தனியாகப் பாடுவதைவிட சேர்ந்து பாடினால் நன்றாக இருக்கும் என்று எண்ணினோம். ஆனால், சமீபகாலமாக அவர்கள் இருவரும் சேர்ந்து பாடுவதில்லை என அறிந்தபோது சற்று ஏமாற்றமாகவே இருந்தது. ஆனாலும் அவர்கள் இருவரிடமும் எங்கள் விருப்பத்தைத் தெரிவித்தபோது மறுப்பு ஏதும் சொல்லாமல் ஒப்புக்கொண்டார்கள். குறிப்பிட்ட நாளில் ரஹ்மானும் மும்பை வந்து சேர, அவர்கள் இருவரும் பாடிய தேசிய கீதம், மும்பையின் பிரபலமான 'ஃபேமஸ் ரெகார்டிங் ஸ்டுடியோவில்' ஒலிப்பதிவானது. இவர்கள் தவிர பண்டிட் சிவகுமார் சர்மா, பண்டிட் ஹரிபிரசாத் சௌராசியா, அம்ஜத் அலிகான், பண்டிட் விஸ்வ மோகன் பட், பாலமுரளிகிருஷ்ணா, 'வீணை' காயத்ரி, வயலின் இரட்டையர்கள் கணேஷ்-குமரேஷ், ரவிகிரண், எஸ்.பி. பாலசுப்ரமணியம்... என்று பலரும் இதில் பங்கேற்றிருக்கிறார்கள்.

வானிலை காரணமாக, வடகோடி இமயத்தில் ரஹ்மானை வைத்து எடுக்க முடியாமல்போன காட்சிகளை, தென்

# கலாம் கொடுத்த

**பாரம்பரியமும் புதுமையும் கைகோத்து இருக்கும் இந்த ஒலிப்பேழைக்கு உலகளாவிய வரவேற்பு கிடைக்கும் என்றார் கலாம்!**



கோடி கடற்கரையில் வைத்து எடுத்து விட்டோம். அந்த ஆடியோ சி.டி. கடந்த ஆண்டு வெளியிடப்பட்டது.

''பாரம்பரியமும், புதுமையும் கைகோத்து நிற்கும் இந்த ஒலிப்பேழைக்கு உலகளாவிய வரவேற்பு கிடைக்கும் என்பதில் சந்தேகமில்லை'' என்று சர்டிபிகேட் கொடுத்தார் முன்னாள் ஜனாதிபதி அப்துல் கலாம்.

உலகிலேயே மிக உயரமான ராணுவ முகாம் இருப்பிடமான சியாச்சின் பனிப் பகுதியில், சில காட்சிகளை எடுத்தால் எப்படி இருக்கும் என்று கனிகா என்னிடம் கேட்க, ''அப்படி ஒரு வாய்ப்பு மட்டும் நமக்குக் கிடைத்தால், நம்மைவிட அதிர்ஷ்டசாலிகள் வேறு யாருமில்லை'' என்றேன் நான். அடுத்த சில நாட்களில், ராணுவ தளபதி விஜ்ஜியை சந்தித்துப் பேசினோம். சியாச்சினில் படப்பிடிப்பு நடத்த அனுமதி வழங்கியதுடன், அனைத்து ஏற்பாடுகளையும் செய்து கொடுத்தார்.

ராணுவத் தளபதியும், மற்ற ராணுவ வீரர்களுடன் சேர்ந்து சியாச்சினில் இந்திய தேசியக்கொடிக்கு மரியாதை செலுத்தினால், இன்னும் கௌரவமாக இருக்கும், என்ற எங்கள் கருத்தைத் தெரிவித்தவுடன், படப்பிடிப்பின்போது ராணுவத் தளபதி விஜ்ஜிம் சியாச்சினுக்கு வந்து எங்களுடன் சேர்ந்துகொண்டார். ஹெலிகாப்டரிலிருந்து, கேமிரா ஓட, நான் 'சல்யூட்' என்று உத்தரவு இட, தளபதி விஜ்ஜியும், மற்ற ராணுவ வீரர்களும் மூவண்ணக் கொடிக்குச் சல்யூட் அடித்தனர்.

படப்பிடிப்பு முடிந்த பிறகு, ''இந்திய ராணுவத்தின் தளபதிக்கு ஜனாதிபதி மட்டும்தான் உத்தரவு இட முடியும். ஆனால், இன்றைக்கு நீங்கள் மூன்று முறை சல்யூட் என்று உத்தரவு இட்டிருக்கிறீர்கள் தெரியுமா?'' என்று கேட்டுச் சிரித்தார் ராணுவத் தளபதி.''

இந்த சி.டி. மற்றும் அதன் ஒலிப்பதிவை ஆட்சேபித்து பொதுநல மனு ஒன்று சென்னை உயர்நீதி மன்றத்தில் தாக்கல் செய்யப்பட்டிருக்கிறது. சென்னையைச் சேர்ந்த ஓய்வுபெற்ற இன்ஸ்பெக்டர் மோகன்ராஜ், 'பரத்பாலா - ரஹ்மான் கூட்டணி தேசிய கீதத்தை அவமதிப்புக்கு உள்ளாக்கியதாக அந்த மனுவில் குறிப்பிட்டிருக்கிறார். தேசியகீதத்தை எப்போது, எவ்வாறு இசைக்கலாம் என்கிற விதிமுறைகளை மீறி இந்த ஒலிப்பதிவு செய்யப்பட்டிருக்கிறது என்கிறார் அவர்.

**– எஸ்.சந்திரமௌலி**

✱ பரத்பாலா – கனிகா



# சர்ட்டிஃபிகேட்!

# உயிர் தந்த சினிமா...!

"சினிமாவுல ஹேர் டிரஸ்ஸரா வர லைன்னா நான் இந் நேரம் செத்திருப்பேன்" என்று அதிர்ச்சியூட்டும் விதமாகத்தான் ஆரம்பிக் கிறார் மதுரை தமிழரசி. தாம்பரம் தாண்டி சேலையூரில் ஒண்டுக்குடித்தன வாசம். உலையில் அரிசி கொதித்துக் கொண் டிருக்க, இன்னொரு அடுப்பில் மெல்லிய தாய்ப் படரும் மீன் குழம்பு வாசம்.

"எதுவும் தெரியாத, உலகம் புரியாதவ ளாத்தான் நான் என் வாழ்க்கையை ஆரம் பிச்சேன். இன்னைக்கு நான் வந்து நிக்கற தூரத்தைத் திரும்பிப் பார்த்தா மலைப்பா இருக்குது. கல்யாண உறவுல ஏற்பட்ட கசப்புணர்ச்சிதான் என்னை சென்னை நோக்கித் துரத்தியடிச்சுது. என்ன பண்ற துன்னு புரியாம தனியாளா தவிச்சு நின்னப்ப, தெரிஞ்சவங்க மூலமா டச்சப் அசிஸ்டெண்டா ஸ்டுடியோவுக்குள்ள நுழைஞ்சேன். மேக்கப் டிபார்ட் மெண்ட்டுக்கு. இதுதான் அடிப்படை அப்புறம் அனுபவத்தை வளர்த்துக்கிட்டு மேக்கப்மேனாவோ ஹேர் டிரஸ்ஸ ராவோ வர வேண்டியதுதான். நாலு வருஷம் உதவியாளரா இருந்தவ, அஞ்சாவது வருஷம் தனியா பண்ண ஆரம்பிச்சுட்டேன். வாணி விஸ்வநாத், சங்கவின்னு பல பேர்கிட்ட பர்சனல் ஹேர் டிரஸ்ஸரா இருந்திருக்கேன். இப்ப கம்பெனி ஹேர் டிரஸ் ஸரா ஷூட்டிங் போயிட்டிருக்கேன்.

யூனியன் கார்டு இருந்தாத்தான் இங்க வேலை செய்ய முடியும். முன்னெல்லாம் உறுப்பினர் கட்டணம் ரொம்பக் கம்மியா இருந்துச்சு... இப்ப மெம்பராக எழுபத்தஞ்சாயிரம் கட்டணும். அடுத்த வருஷம் ஒன்றரை லட்சமாகப் போறதாப் பேசிக்கறாங்க. பெரும்பாலும் ஆண்களுக்கு ஹேர் டிரஸ்ஸர் தேவைப் படறதில்ல (தனிப்பட்ட ஹேர் டிரஸ்ஸர் விதிவிலக்கு). அவங்களாவே பண்ணிக்கு வாங்க. பெண்களுக்குத்தான் நாங்க. ரெண்டு விதமா வேலை செய்வோம். நடிகைகளுக்கு பர்சனல் ஹேர் டிரஸ்ஸரா இருக்கிறது ஒரு வகை. இன்னொன்னு



கம்பெனி மூலமா செய்யறது.

பர்சனலா போனா நடிகைதான் சம்பளம் தருவாங்க. சமயத்துல நடிகை, கம்பெனி கிட்ட அக்ரிமெண்ட் போட்டு, கம்பெனி மூலமா எங்களுக்குச் சம்பளம் தரப்படுறதும் உண்டு. மொத்தமா இத்தனை நாளைக்கு இவ்ளோ சம்பளம்னு நாங்க பேசிக்கிட்டு வேலைக்குப் போகும்போது பேட்டாவும் டெய்லி கிடைக்கும். சினிமான்னா ஒரு நாள் சம்பளமா சிக்ஸ் டு சிக்ஸ் கால்ஷீட்டுக்கு முந்நூத்தம்பது ரூபா தருவாங்க. சீரியல்னா சிக்ஸ் டு நைன் கால் ஷீட்டுக்குச் சம்பளம் நானூத்தம்பது ரூபாய்.

**மு**ன்னெல்லாம் கார் அனுப்பி எங்களை ஷூட்டிங் ஸ்பாட்டுக்கு வரவழைப்பாங்க. இப்பல்லாம் நாங்களே போயிடறோம். காலைலயே போய், கதாநாயகிக்காகவோ மத்த ஆர்ட்டிஸ்டுகளுக்காகவோ காத்திருப்போம். வந்ததும் சொந்த முடியா, விக்கான்னு பார்த்துட்டு வேலையை ஆரம்பிக்க வேண்டியதுதான். என்ன ஷாட் எடுக்கப் போறாங்க, லாங் ஷீனான்னு சொல்லிடுவாங்க. அதுக்கேத்த மாதிரி கூந்தலை வடிவமைப்போம். சிலருக்கு நீட்டு முடியா இருக்கும். சிலருக்கு சுருட்டையா இருக்கும். யாருக்கு எப்படிப் பண்ணா வேண்டிய ரிசல்ட் கிடைக்குமோ அப்படிச் செய்யணும். சிகையலங்காரத்துக்குத் தேவையான சின்னச் சின்ன பொருட்களை நாங்களே கொண்டு வந்துடுவோம். பவுடர், மேக்கப் செட் எல்லாம் சம்பந்தப்பட்ட நடிகைகளும் எடுத்





**புரியாதவங்கதான் இந்த ஃபில்டைப் பத்தி புரியாம பேசுவாங்க. புரிஞ்சவங்களுக்கு இது ஒரு பூங்காவனம்!**

துட்டு வருவாங்க. கம்பெனியும் தரும். விக் எல்லாம் வாடகைக்கு எடுக்கறது. சில சமயம் பிரத்யேகமா தயாரிக்கப்படுறதும் உண்டு. பெரும்பாலும் கொடுத்த வேலையைச் சரியானபடி செஞ்சுடுவோம். எப்பவாவது சொதப்பறதும் உண்டு. டைரக்டர்கிட்ட வாங்கிக் கட்டிக்கணும். ஒருமுறை ராமகிருஷ்ணா படத்துக்காக அகத்தியன் சார்கிட்ட வாங்கின டோஸை மறக்கவே முடியாது.. திட்றதுலயே மரியாதையா திட்டுற மனுஷன் அவர்.

**ப**ர்சனல் ஹேர் டிரஸ்ஸரா போகும் போது நடிகைங்க நம்மகிட்ட ஒரு தோழி மாதிரி பழகுவாங்க. பர்சனலான பல விஷயங்களைப் பகிர்ந்துக்குவாங்க. ஒரு முறை ஒரு பிரபல நடிகை முக்கியமான ஒரு விஷயத்தை எங்கிட்ட பகிர்ந்துக்கிட்டாங்க. ரெண்டு நாள்தான் பழகியிருப்பாங்க. மனசுல எந்த தூசியும் இல்லன்னு புரிஞ்சதும் கடகடன்னு எங்கிட்ட கொட்டிட்டாங்க. அவங்க நம்பிக்கை வைக்கற அளவுக்கு நான் நடந்துக்கிட்டதை நினைச்சு ரொம்ப சந்தோஷமா இருந்துச்சு. சில பேர் பந்தா பண்ணி எங்களைப் பந்தாடுறதும் நடக்கும். கம்பெனி ஹேர் டிரஸ்ஸரா போனா வர்றவங்களுக்கு வரிசையா தலை சீவிட்டுப் போக வேண்டியதுதான். மரியாதை நல்லா தருவாங்க. நம்மகிட்டயும் எதிர்பார்ப்பாங்க. மாமன், மச்சான், அக்கா, அத்தை, அண்ணன், தம்பின்னு உறவு முறை சொல்லிக் கூப்பிட்டுக்கிட்டுதான் எல்லாரும் பழகுவோம். மனசுல கள்ளங்கபடம் இருக்காது.

ஒரு முறை ஹேர் டிரஸ்ஸிங் செஞ்சிட்டா அப்புறம் எங்களுக்கு வேலை அதிகமா இருக்காது. ஆனாலும் நாங்க ஸ்பாட்லயேதான் இருப்போம். பண்ணின ஹேர் லூசாகுதா, முடி அங்கங்க பிசிறு தட்டுதான்னு பார்த்துச் சரிபண்ணிட்டே இருப்போம். மாசத்துல பத்து நாளாவது ஷூட்டிங் இருந்துடும். இல்லாத நாட்கள்ல பணம் இல்லன்னா வருத்தப்படாம கடன் வாங்கி குடும்பம் நடத்துவோம். எல்லாம் ஷூட்டிங் போய் சரி பண்ணிக்கலாம்ங்கற நம்பிக்கைதான். நடிகைங்ககிட்ட பர்சனல் ஹேர் டிரஸ்ஸரா வேலை பார்த்தா அதிர்ஷ்டம்தான். நமக்கான தேவைகளை அவங்களே பார்த்துக்குவாங்க. உதவி எதுவும் தேவைப்பட்டா தயங்காம செய்வாங்க.

**எ**ப்பவோ என் வாழ்க்கை திசை மாறிப் போயிருக்க வேண்டியது. சினிமாவுக்கு வந்ததால இப்ப நல்லபடியா போயிட்டிருக்கு. புரியாதவங்கதான் இந்த ஃபீல்டைப் பத்தி புரியாமப் பேசுவாங்க. புரிஞ்சவங்களுக்கு இது ஒரு பூங்காவனம். மனசை இலகுவாக்குற துறை. எவ்ளோ கஷ்டத்தோடு வந்தாலும் எல்லாத்தையும் துடைச்சுப் போட்டுட்டு இலேசாக்கிடும். நிறைவான சம்பளம்; நிம்மதியான வாழ்க்கை... வேற என்னங்க வேணும் மனுஷனுக்கு?'' - தமிழரசியின் முகத்தில் பளீரென்ற மின்னல் சிரிப்பு.

சந்திப்பு : **மு.மாறன்**

படங்கள் : **பொள்ளாச்சி சுந்தரம்**

# காந்தி மை ஃபாதர்

"உன் அப்பாவின் பெயர் என்ன? மும்பையில் உள்ள ஒரு மருத்துவமனையில், அரை மயக்கத்தில் அழுக்கு உடையும் சிடுக்கேறிய தாடியுமாக அனுமதிக்கப்படும் ஹரிலாலிடம் இந்தக் கேள்வி கேட்கப்படுகிறது. காந்திஜியின் பெயரைச் சொல்கிறான் அவன். "அவர் உனக்கு மட்டுமல்ல; தேசத்துக்கே தந்தை. ஆனால், மருத்துவமனையில் சேர்த்துக் கொள்ள உன் அப்பாவின் பெயரைப் பதிவு செய்து கொள்ள வேண்டும். அதைச் சொல்" என்கிறார் மருத்துவ ஊழியர் அன்புடன். கதையின் முடிச்சே இதுதான். தம்முடைய தனித்துவத்தால் உலகையே கட்டிப் போட்ட தந்தை. அவரது கொள்கைகள் நடைமுறைக்கொவ்வாதவை; ஏற்க முடியாதவை என்று வழிமாறிப் போகும் மகன். மகனுக்கு லண்டனில் பாரிஸ்டர் படிப்பு படிக்க ஆசை. வாய்ப்பும் கிடைக்கிறது. ஆனால், தென்னாப்பிரிக்காவில் தன்னோடு தங்கி நிறவெறிக்கு எதிரான போராட்டத்தில் மகனும் பங்கு கொள்ளவேண்டும் என்கிறார் காந்தி. எல்லாமே கசக்கிறது ஹரிலாலுக்கு. தீயவழியில் போகிறான். இஸ்லாமுக்கு மதம் மாறுகிறான் ஹரிலால்.

காந்திஜியின் ஒரு ரயில் பயணத்தின் போது அவருக்கு மக்கள் வெள்ளம் ஜே கோஷம் போட, ஹரிலால் கஸ்தூர்பாவுக்கு ஜே போடுவதும், அந்தத் தனிக் குரல் போகப் போக மக்களின் கோஷத்துக்குள் அமுங்கிப் போவதும் சிறப்பு. சபாஷ் இயக்குநர் ஃபெரோஸ் கான்.

ஹரிலாலின் தவிப்புகளை அறிய முடிகிறது என்றாலும் அவர்மீது பரிதாபப்பட முடியவில்லை. அப்பாவுக்கு வெறுப்பேற்ற அவர் வேண்டுமென்றே செயல்படுவது போன்ற உணர்வையே காட்சிகள் ஏற்படுத்துகின்றன.

இந்தியாவில் பிரிட்டிஷ் அரசுக்கெதிராகப் போராட காந்தி தாய்நாட்டுக்குத் திரும்பும் காட்சி. "காந்தி இந்த நாட்டைவிட்டுப் போகிறார். அப்பாடா என்ற நிம்மதிப் பெருமூச்சுடன் அவரை வழியனுப்புகிறேன். கூடவே இவரை இனி சமாளிக்க வேண்டிய பிரிட்டிஷ் அரசுக்கு என் மௌன அஞ்சலி" என்கிறார் தென்னாப்பிரிக்கச் சிறை அதிகாரி!

சீனியர் காந்தியின் மனைவியாக ஷெஃபாலியும், ஜூனியர் காந்தியின் மனைவியாக பூமிகா சாவ்லாவும் ஜொலிக்கிறார்கள்.

மிகச் சிறு வயதில் காட்டுவதோடு சரி, மற்றபடி காந்தியின் பிற மகன்களைப் பற்றி சௌகரியமாக மறந்துவிட்டு நகர்கிறது கதை.

நடிகர் அனில் கபூர், முதல் தயாரிப்பு மூலம் காந்தியையும் சுதந்திர காலகட்டத்தையும் இந்தத் தலைமுறைக்கும் நினைவுபடுத்தியதற்காகப் பாராட்டுகள்.

**- ஜி.எஸ்.எஸ்.**

**விமர்சனம்**



## ஆசிரியர் பக்கம்

# கடுகு வெடிக்கும் வரை..!



'கடுகு வெடிக்கும் வரை காத்திருந்து, அதன் பிறகு ஜீரகம் சேர்க்கவும்; ஜீரகம் நிறம்மாறியதும் உளுத்தம் பருப்பைச் சேர்த்துப் பொன்நிறமாகும் வரை...'

பழைய சமையல் குறிப்புகளில் இப்படிப் படிப்படியான விவரணைகள் இருக்கும். கடுகு வெடிப்பதற்கு முன் அடுத்த திரவியத்தைச் சேர்ப்பது நம் அம்மா - பாட்டி காலத்துச் சமையலறைகளில் கடும்குற்றம். உடனே ஒரு கண்டனத் தீர்மானம். சில சமயங்களில் தண்டனைத் தீர்ப்புக் கூட வந்து விழும்.

காரணம் அருமையானது - கடுகு நன்கு வெடிக்காவிட்டால் ஜீரணமாகாது! அது வெடிப்பதற்கு முன் உளுத்தம் பருப்பைச் சேர்த்துவிட்டால், அவ்வளவு கடுகும் வெடித்து முடியும் முன், உளுத்தம் பருப்பு தீய்ந்துபோய் விடும்! ஆகக்கூடி நிதானம்தான் பக்குவத்தை நிர்ணயிக்கிறது.

இன்றைக்குக் கடுகு வெடிப்பதற்கு நாம் காத்திருக்கத் தயாராயில்லை. காப்பர் பாட்டம் பாத்திரத்தில் எண்ணெயைச் சொட்டவிட்டு, எல்லா சாமான்களையும் அதில் தூக்கிப் போட்டுவிட்டு அடுத்த காரியத்துக்கு ஓடுகிறோம். அல்லது ஃபாஸ்ட் ஃபுட்டைத் துரத்துகிறோம்.

சமையலறை என்றில்லை... சாலைகள், கடைகள், சத்திரம் - சாவடி எங்கே போனாலும் இதே கதைதான்!

பில் கவுன்டரில் கியூ வரிசையில் நின்றால், நம் தோளுக்கு மேல் வேறொரு கை நீ.....ண்டு வந்து நோட்டைத் தருகிறது.

லிஃப்ட்டில் பாய்ந்து ஏறி இடம் பிடித்துக்கொள்வதுகூட அகடவிகட வித்தையாக வளர்ந்து நிற்கிறது.

சாலையில் பிறரை முந்திக் கொண்டு நமது வாகனத்தைப் பறக்க விடுவது பற்றியோ கேட்கவே வேண்டாம்! சைக்கிள் கேப்பில் ஆட்டோ என்ன, ரோட் என்ஜினைக்கூட நுழைப்போம். அடுத்தவரை நெருக்கித்தள்ளி எப்படியாவது முந்திக் கொண்டு போக பல்வேறு ஜதிகளில் ஹார்ன் ஒலியை ஓயாமல் எழுப்புவோம். ஆம்புலன்ஸுக்காகக் கூட நாம் ஒதுங்காமல் பாய்ந்து போய், அடுத்த சிக்னலில் மாட்டிக் கொண்டு, யாரையெல்லாம் நாம் கடந்து வந்தோமோ அத்தனை பேரும் வந்து அதே சிக்னலில் நிற்கிற வரை காத்திருப்போம்!

கடுகு வெடிக்கிறவரை காத்திராத அவசரம்தான் இவ்வளவும்!

பறப்பதால் மிச்சம் பிடிக்கும் சில மணித்துளிகள் சல்லடையில் ஊற்றிய நீர்போல் ஓடிவிடும்.

நாம் நெருக்கித் தள்ளி ஹிம்சித்தவர்களின் எரிச்சலும் தீய்க்கும் பார்வைகளும்தான் மிச்சமாகும்.

ஆனால், அஜீரணம் குறித்து இன்று என்ன கவலை? 'கன்னா பின்னாவென்று சாப்பிட்டுவிட்டு கூடவே எங்கள் ஆன்டாஸிட்டையும் போட்டுக் கொள்ளுங்கள்' என்று குறுக்கு வழி ஆரோக்கியத்தை(?)விளம்பரப்படுத்தும் காலம் அல்லவா இது!






Godrej
CINTHOL
DEODORANT AND COMPLEXION SOAP
CINTHOL

